தெள்ளா ரமுதே சிவலோகக், கோனே எனுஞ்சொல் நினைந்து
செவி கொள்ளா தென்னே கூறாயே. ௬

கூறா நின்ற இடர்க்கவலைக் குடும்பக் கூத்தாள் துளைந்து
தடு, மாறா நின்ற பாவியைநீ வாவென் றழைத்தால் ஆகாதோ,
நீறார் மேனி முக்கணுடை நிமலா அடியார் நினைவினிடை,
ஆறாய்ப் பெருகும் பெருங்கருணை அரசே என்னை ஆள்வானே.

வானே முதலாம் பெரும்பூதம் வகுத்துப் புரந்து
மாற்றவல்ல, கோனே என்னைப் புரக்குநெறி குறித்தா
யிலையே கொடியேனைத், தானே படைத்திங் கென்னபலன்
தன்னைப் படைத்தா யுன்கருத்தை, நானே தென்றிங் கறி
யேனே நம்பி னேன்கண் டருள்வாயே. ௮

கண்டார் கண்ட காட்சியுநீ காணார் காணுங் கள்வனுநீ,
பண்டா ருயிர்நீ யாக்கையுநீ பல்வாஞ் சமயப் பகுதியுநீ, எண்
தோள் முக்கட் செம்மேனி எந்தாய் நினக்கே எவ்வாறு,
தொண்டாய்ப் பணிவ ரவர்பணிநீ சூட்டிக் கொள்வ தெவ்வாறே.

ஆட்டி எனதென் றிடுஞ்சுமையைச் சுமத்தி எனையுஞ்
சுமையாளாக், கூட்டிப் பிடித்து வினைவழியே கூத்தாட்
டினையே நினதருளால், வீட்டைக் கருதும் அப்போது வெளி
யாம் உலக வியப்பனைத்தும், எட்டுக் கடங்காச் சொப்பனம்
போல் எந்தாய் இருந்த தென்சொல்வேன். ௧௦

---

## ௨௧. வம்பனேன்

வம்பனேன் கள்ளங் கண்டு மன்னருள் வெள்ள ராய,
உம்பர்பால் ஏவல் செய்யென் றுணர்த்தினை ஓகோ வானோர்,
தம்பிரா னேநீ செய்த தயவுக்குங் கைம்மா றுண்டோ, எம்
பிரான் உய்ந்தேன் உய்ந்தேன் இனியொன்றுங் குறைவி லேனே.

குறைவிலா நிறைவாய் ஞானக் கோதிலா னந்த வெள்ளத்
துறையிலே படிந்து மூழ்கித் துளைந்துநான் தோன்றா வாறுள்

துனிவளர் பொருளே மாறாத் தண்ணருங் கருணை பூத்த
இனியகற் பகமே முக்கண் எந்தையே நினக்கன் பின்றி
நனிபெருங் குடிலங் காட்டு நயனவேற் கரிய கூந்தல்
வனிதையர் மயக்கி லாழ்ந்து வருந்தவோ வம்ப னேனே.

---

## ௨௨. சிவன் செயல்

சிவன்செய லாலே யாதும் வருமெனத் தேறேன் நாளும்
அவந்தரு நினைவை யெல்லாம் அகற்றிலேன் ஆசை வெள்ளங்
கவர்ந்துகொண் டிழுப்ப அந்தக் கட்டிலே அகப்பட் டையோ
பவந்தனைக் கட்டிக் கட்டிப் பதைக்கின்றேன் பாவி யேனே. க

பாவியேன் இனியென் செய்கேன் பரமனே பணிந்துன் பாதஞ்
சேவியேன் விழிநீர் மல்கச் சிவசிவ என்று தேம்பி
ஆவியே நிறைய வந்த அமுதமே என்னேன் அந்தோ
சாவிபோஞ் சமயந் தாழ்ந்து சகத்திடைத் தவிக்கின் றேனே.

இடைந்திடைந் தேங்கி மெய்புள கிப்ப எழுந்தெழுந் தையநின் சரணம், அடைந்தனன் இனிநீ கைவிடேல் உனக்கே அபயமென் றஞ்சலி செய்தாள், உடைந்துடைந் தெழுது சித்திரப் பாவை யொத்துநான் அசைவற நிற்பத், தொடர்ந்துநீ எனைஆட் கொள்ளுநா ளென்றோ சோதியே ஆதிநா யகனே. ௩

ஆதியாய் நடுவாய் அந்தமாய்ப் பந்தம் யாவுமற் றகம்புறம் நிறைந்த, சோதியாய்ச் சுகமா யிருந்தஎம் பெருமான் தொண்டனேன் சுகத்திலே இருக்கப், போதியா வண்ணங் கைவிடல் முறையோ புன்மையேன் என்செய்கேன் மனமோ, வாதியா நின்ற தன்றியும் புலன்சேர் வாயிலோ தீயினுங் கொடிதே. ௪

வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடர் வந்தெனை யீர்த்துவெங் காமத், தீயிலே வெதுப்பி உயிரொடுந் தின்னச் சிந்தைநைந் துருகிமெய்ம் மறந்து, தாயிலாச் சேய்போல்

அலைந்தலைப் பட்டேன் தாயினுங் கருணையா மன்றாள், நாயக மாமி யொளிவிடு மணியே நாதனே ஞானவா ரிதியே. ௫

ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடும் நாட்டமே நாட் டத்துள் நிறைந்த, வானமே எனக்கு வந்துவந் தோங்கும் மார்க்கமே மருளர்தாம் அறியா, மோனமே முதலேல் முத்தி நல் வித்தே முடிவிலா இன்பமே செய்யுந், தானமே தவமே நின்னைநான் நினைந்தேன் தமியனேன் தனைமறப் பதற்கே. ௬

மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும் வந்துநின் அன் பர்தம் பணியாம், அறமது கிடைக்கின் அன்றியா னந்த அற் புதத் திட்டையின் திளைத்தல், துறவது வேண்டும் மௌனியாய் எனக்குத் தாயநல் லருள்தரின் இன்னம், பிறவியும் வேண் டும் யானென திறக்கப் பெற்றவர் பெற்றிடும் பேறே. ௭

பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே பெருகிய கரு ணைவா ரிதியே, நற்றவத் துணையே ஆனந்தக் கடலே ஞாதுரு ஞானஞே யங்கள், அற்றவர்க் கருத நட்புடைக் கலப்பே அநேகமாய் நின்னடிக் கன்பு, கற்றதுங் கேள்வி கேட்டதும் நின்னைக் கண்டிடும் பொருட்டன்றோ காணே. ௮

அன்றனால் வருக்கும் ஒளிநெறி காட்டும் அன்புடைச் சோதியே செம்பொன், மன்றுள் முக்கண்ணுங் காளகண் டமுமாய் வயங்கிய வானமே என்றாள், துன்றகூ ரிருளைத் துரந்திடும் மதியே துன்பமும் இன்பமு மாகி, நின்றவா தனையைக் கடந்தவர் நினைவே நேசமே நின்பரம் யானே. ௯

யானெனல் காணேன் பூரண நிறைவில் யாதினும் இருந் தபெ ரொளியே, தானென நிற்குஞ் சமத்துற எம்மைத் தன் னையு முணர்த்துந் தருக்காள், வானென வயங்கி யொன்றிரண் டென்று மார்க்கமா நெறிகடந் தமருந், தேனென ருசிக்குள் அன்பரைக் கலந்த செல்வமே சிற்பர சிவமே. ௧௦

---

## உந. தன்னையொருவர்

தன்னை யொருவர்க் கறிவரிதாய்த் தானே தானாய் எங்குநிறைந், துன்னற் கரிய பரவெளியாய் உலவா அமுதாய் ஒளிவிளக்காய், என்னுட் கலந்தாய் யானறியா திருந்தாய் இறைவா இனியேனும், நின்னைப் பெறுமா றெனக்கருளாம் நிலையைக் கொடுக்க நினையாயோ. க

நினையு நினைவுக் கெட்டாத நெறிபெற் றுணர்ந்த நெறியாளர், வினையைக் கரைக்கும் பரம இன்ப வெள்ளப் பெருக்கே நினதருளால், மனைவி புதல்வர் அன்னைபிதா மாடு வீடென் றிடுமயக்கந், தனையும் மறந்திங் குனைமறவாத் தன்மை வருமோ தமியேற்கே. உ

வரும்போம் என்னும் இருநிலைமை மன்று தொருதன் மைத்தாகிக், கரும்போ தேனோ முக்கனியோ என்ன என் னுள் கலந்துநலந், தரும்பே ரின்பப் பொருளேநின் தன்னை நினைந்து நெக்குருகேன், இரும்போ கல்லோ மரமோஎன் இதயம் யாதென் றறியேனே. ங

அறியுந் தரமோ நானுன்னை அறிவுக் கறிவாய் நிற்கையினால், பிறியுந் தரமோ நீஎன்னைப் பெம்மா னேபே ரின்பமதாய்ச், செறியும் பொருள்நீ நின்னையன்றிச் செறியாப் பொருள்நான் பெரும்பேற்றை, நெறிநின் றெழுக விசாரித்தால் நினக்கோ இல்லை எனக்காமே. ச

எனதென் பதும்பொய் யானெனல்பொய் எல்லா மிறந்த இடங்காட்டும், நினதென் பதும்பொய் நீயெனல்பொய் நிற் கும் நிலைக்கே நேசித்தேன், மனதென் பதுமோ என்வசமாய் வாரா தைய நின்னருளோ, தனதென் பதுக்கும் இடங் காணேன் தமியேன் எவ்வா றுய்வேனே. ரு

உய்யும் படிக்குன் திருக்கருணை ஒன்றைக் கொடுத்தால் உடையாய்பாழ்ம், பொய்யும் அவாவும் அழுக்காறும் புடை

பட்டோடும் நன்னெறியாம், மெய்யும் அறிவு பெறும்பேறும் விளங்கு மெனக்குன் னடியார்பால், செய்யும் பணியுங் கைகூடுஞ் சிந்தைத் துயருந் தீர்ந்திடுமே. ௬

சிந்தைத் துயரென் றொருபாவி சினந்து சினந்து போர் முயங்க, விந்தைக் கிடமாய்ச் சகவாழ்வை நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன், எந்தப் படியுன் னருள்வாய்க்கும் எனக்கப் படிநீ அருள்செய்வாய், பந்தத் துயரற் றவர்க்கெளிய பரமா னந்தப் பழம்பொருளே. ௭

பொருளைப் பூவைப் பூவையரைப் பொருளென் றெண்ணும் ஒருபாவி, இருளைத் துரத்திட் டொளிநெறியை என்னுட் பதிப்ப தென்றுகொலோ, தெருளத் தெருள அன்பர்நெஞ்சந் தித்தித் தூறுந் தெவிட்டாத, அருளைப் பொழியுங் குணமுகிலே அறிவா னந்தத் தாரமுதே. ௮

ஆரா அமிர்தம் விரும்பினர்கள் அறிய விடத்தை அமிர்தாக்கும், பேரா னந்தச் சித்தனெனும் பெரியோய் ஆவிக் குரியோய்நீ, காரார் கிரக வலைபினிடைக் கட்டுண் டிருந்த வினையெலாம், ஊரா லொருநாட் கையுணவேற் றுண்டால் எனக்கிங் கொழிந்திடுமே. ௯

எனக்கென் றிருந்த உடல்பொருளும் யானும் நினதென் றீந்த வன்னம், அனைத்தும் இருந்தும் இலவாகா அருளாய் தீமை தழீஇக்காய், மனத்துள் புகுந்து மயங்கவுமென் மதித்துட் காமம் வந்ததென்னே, தனக்கொன் றுவமை அறநிறைந்த தனியே தன்னந் தனிமுதலே. ௧௦

# உச. ஆசையெனும்

ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவும் மன தலையுங் காலம், மோசம்வரும் இதனலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து முத்திக் கான, நேசமும்நல் வாசமும்போய்ப் புலனயிற் கொடுமைபற்றி நிற்பர் அந்தோ, தேசபழுத் தருள் பழுத்த பராபரமே நிராசையின்றேல் தெய்வ முண்டோ. ௧

இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட் டருள்செ யென எசற்றேநான், புரப்பான்றன் அருள்நாடி இருப்பது போல் எங்குநிறை பொருளே கேளாய், மரப்பான்மை நெஞ் சினன்யான் வேண்டுவகேட் டிரங்கெனவே மௌனத் தோ டந், தரப்பான்மை அருள்நிறைவில் இருப்பதுவோ பரா பரமே சகச நிட்டை. ௨

சாட்டையிற் பம்பர சாலம் போல்எலாம்
ஆட்டுவான் இறையென அறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறஅருட் செயலில் நிற்றியேல்
வீட்டறந் துறவறம் இரண்டும் மேன்மையே. ௩

தன்னெஞ்ச நினைப்பொழியா தறிவிலிநான் ஞானமெனுந் தன்மை பேச, உன்னெஞ்ச மகிழ்ந்தொருசொல் உரைத்த னையே அதனைஉன்னி உருகேன் ஐயா, வன்னெஞ்சோ இரங் காத மரநெஞ்சோ இருப்பு நெஞ்சோ வைர மான, கன்னெஞ் சோ அலதுமண்ணாங் கட்டிநெஞ்சோ எனதுநெஞ்சங் கரு திற் றனே. ௪

வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தருள் தோற்றமுஞ் சோபனம்
ஆழி போல்அருள் ஐயன் மவுனத்தால்
ஏழை யேன்பெற்ற இன்பமுஞ் சோபனம். ௫

கொடுக்கின் றோர்கள்பால் குறைவையா தியானெனுங் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பால் பிரிகிலா துள்ளன்பு விடாதே
அடுக்கின் றோர்களுக் கிரங்கிடுந் தண்டமிழ் அலங்கல்
தொடுக்கின் றோர்களைச் சோதியா ததுபரஞ் சோதி. ௬

உலக மாயையி லேளனி யென்றனை உழல விட்டனை யேடையாய் அருள், இலகு பேரின்ப வீட்டினில் என்னையும் இருத்தி வைப்பதெக் காலஞ்சொ லாய்எழில், திலகவாள் நுதற் பைந்தொடி கன்னிகை தேக்க நாடகஞ் செய்தடி யார்க்கெலாம், அலகி லாவினை தீர்க்கத் துசங்கட்டும் அப்பனே அருள் ஆனந்த சோதியே. எ

முன்னிலைச்சுட் டொழிதியெனப் பல்காலும் நெஞ்சே நான் மொழிந்தே னெகின், தன்னிலையைக் காட்டாதே என்னை யொன்றுச் சுட்டாதே சரணநான் போந்த, அந்நி லையே நிலையந்த நிலையிலே சித்திமுத்தி யனைத்துந் தோன் றும், என்னிலைப் நன்றிநிலை சுகமென்றே சுகர் முதலோர் நாடினரே. அ

அத்துவித நம் பெரும்பேறென் றறியாமல் யானெனும் பே யகந்தை யோடு, மத்தமதி யினர்போல மனங்கிடப்ப இன்னம் இன்னம் வருந்து வேனோ, சுத்தபரி பூரணமாய் நின்மலமாய் அகண்டிதமாய்ச் சொரூபா னந்தச், சத்திகள் நீங் காதவண்ணந் தன்மயமாய் அருள்பழுத்துத் தழைத்த வொன்றே. கூ

தந்தை தாயுநீ என்றுயிர்த் துணையுநீ சஞ்சல மதுதீர்க்க வந்த தேசிக வடிவுநீ உனையலால் மற்றொரு துணைகாணேன் அந்தம் ஆதியும் அளப்பருஞ் சோதியே ஆதியே அடியார்தஞ் சிந்தை மேவிய தாயுமா னவனெனுஞ் சிரகிரிப் பெருமானே.

காதில் ஓலையை வரைந்துமேற் குமிழையுங் கறுவி வேள் கருவிலைப், போது போன்றிடுங் கன்னியர் மயக்கிலெப் போதுமே தாராமல், மாது காதலி பங்கனை யபங்கனை பாடமா னினைசூழுஞ், சேது மேவிய ராமநா யகன்தனைச் சிந்தைசெய் மடநெஞ்சே. கக

அண்டமுமாய்ப் பிண்டமுமாய் அளவி லாத
ஆருயிருக் கோருயிராய் அமர்ந்தா யானால்
கண்டவரார் கேட்டவரார் உன்றனுன்னைக்
காண்பதல்லால் என்னறிவாற் காணப் போமோ

வண்டுளப மணிமார்பன் புதல்வ னோடு
மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்
புண்டரிக புரத்தினில் நாதாந்த மௌன
போதாந்த நடம்புரியும் புனித வாழ்வே. கஉ

பொறியிற் செறிஐம் புலக்கனியைப் புந்திக் கவராற் புகுந்திழுத்து, மறுகிச் சுழலும் மனக்குரங்கு மாள வாளா இருப்பேனோ, அறிவுக் கறிவாய்ப் பூரணமாய் அகண்டானந்த மயமாகிப், பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப் பெம்மா னேஎம் பெருமானே. கங

உரையுணர் விறந்து தம்மை உணர்பவர் உணர்வி னூடே
கரையிலா இன்ப வெள்ளங் காட்டிடும் முகிலே மாறாப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போல் சித்தந் தெளிவனோ சிறியனேனே.

கேவல சகல மின்றிக் கீழொடு மேலாய் எங்கும்
மேவிய அருளின் கண்ணாய் மேவிட மேலாய் இன்பந்
தாவிட இன்பா தீதத் தனியிடை யிருத்தி வைத்த
தேவெனும் மௌனி செய்பொற் சேவடி சிந்தை செய்வாம்.

தோற்றுளார் இன்று மாளா நின்றனர் அதனைக் கண்டும்
போற்றிலேன் நின்னை அந்தோ போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலேன் அகண்டா னந்த அண்ணலே அளவில் மாயைச்
சேற்றிலே இன்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறிய னேனே.

போதம் என்பதே விளக்கொவ்வும் அவித்தைபொய்இருளாந்
தீதி லாவிளக் கெடுத்திருள் தேடவுஞ் சிக்கா
தாத லால்அறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லையென் றெம்பிரான் சுருதியே இயம்பும். கஎ

சுருதி யேசிவா கமங்களே உங்களாற் சொல்லும்
ஒருத னிப்பொருள் அளவையீ தென்னவா யுண்டோ
பொருதிரைக்கடல் நுண்மணல் எண்ணினும் புகலக்
கருத எட்டிடா நிறைபொருள் அளவையார் காண்பார். கஅ

மின்னைப் போன்றன அகிலமென் றறிந்துமெய்ப் பொருளாம்
உன்னைப் போன்றநற் பரம்பொருள் இல்லையென் றோர்ந்து
பொன்னைப்போன் றநின் போதங்கொண் டுன்பணி பொருந்தா
என்னைப் போன்றுள ஏழையர் ஐயஇங் கெவரே. கக

தாயுந் தந்தையும் எனக்குற வாவதாஞ் சாற்றின்
ஆயும் நீயுநின் அருளுநின் அடியரும் அன்றோ
பேய னேன்றிரு வடியிணைத் தாமரை பிடித்தேன்
நாய னேனனை ஆளுடை முக்கண்நா யகனே. உ0

காந்தமதை எதிர்காணிற் கருந்தாது செல்லுமக் காந்தத் தொன்று, தோய்ந்தவிடம் எங்கேதான் அங்கேதான் சலிப்பறவும் இருக்கு மாபோல், சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு ளிருக்குமத்தாற் சலிக்குஞ் சித்தம், வாய்ந்த பொருள் இல்லையெனிற் பேசாமை நின்றநிலை வாய்க்கு மன்றே. உக

பொற்பு றுங்கருத் தேயக மாயதிற் பொருந்தக்
கற்பின் மங்கைய ரெனவிழி கதவுபோற் கவினச்
சொற்ப னத்திலுஞ் சோர்வின்றி யிருந்தநான் சோர்ந்து
நிற்ப தற்கிந்த வினைவந்த வாறென்கொல் நிமலா. உஉ

வந்த வாறிந்த வினைவழி யிதுவென மதிக்கத்
தந்தவா றன்றோ வள்ளுவனார் விலையன்றித் தமியேன்
நொந்த வாறுகண் டிரங்கவும் இலைகற்ற நூலால்
எந்த வாறினித் தப்பாரா உய்குவேன் ஏழை. உ௩

சொல்லாலும் பொருளாலும் அளவை யாலுந்
தொடரவொண்ணா அருள்நெறியைத் தொடர்ந்துநாடி
நல்லார்கள் அவையகத்தே யிருக்கவைத்தாய்
நன்னர் நெஞ்சந் தன்னலமும் நணுகுவேனோ
இவ்வொளி யாயுலகோ டுயிரை யீன்றிட்
டெண்ணரிய யோகினுக்கும் இவனே என்னக்
கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனிக்
கற்பகமே பராபரமே கைலை வாழ்வே. உ௪

வான்பொரு ளாகி எங்குநீ யிருப்ப வந்தெனைக் கொடுத்தநீ யாகா, தேன்பொருள் போலக் கிடக்கின்றேன் முன்னை இருவினை வாதனை யன்றோ, நின்பொரு ளான அமிர்தமே நின்னைச் சிந்தையிற் பாவனைசெய்யும், நான்பொரு ளானேன் நல்லநல் அரசே நானிறந் திருப்பது நாட்டம். ௩௮

நாட்டமுன் றுடைய செந்நிற மணியே நடுவுறு நாயக விளக்கே, கோட்டமில் குணத்தோர்க் கெளியவர்க் குணமே கோதிலா அமிர்தமே நின்னை, வாட்டமில் நெஞ்சங் கிண்ணமாச் சேர்த்து வாய்மடுத் தருந்தினன் ஆங்கே, பாட்டளி நறவம் உண்டயர்ந் ததுபோற் பற்றயர்ந் திருப்பதெந் நாளோ.

என்னுடை உயிரே என்னுளத் தறிவே என்னுடை அன்பெனும் நெறியாய், கன்னன்முக் கனிதேன் கண்டமிர் தென்னக் கலந்தெனை மேவிடக் கருணை, மன்னிய உறவே உன்னைநான் பிரியா வண்ணமென் மனமெனுங் கருவி, தன்னது வழியற் றென்னுழைக் கிடப்பத் தண்ணருள் வரமது வேண்டும். ௪௦

---

## ௨௫. எனக்கெனச்செயல்

எனக்கெ னச்செயல் வேறிலை யாவுமிங் கொருநின்
தனக்கெ னத்தகும் உடல்பொரு ளாவியுந் தந்தேன்
மனத்த கத்துள அழுக்கெலாம் மாற்றியெம் பிரான்நீ
நினைத்த தெப்படி யப்படி அருளுதல் நீதம். ௧

உளவ றிந்தெலாம் நின்செய லாமென வுணர்ந்தோர்க்
களவி லானந்தம் அளித்தனை அறிவிலாப் புன்மைக்
களவு நாயினேற் கிவ்வணம் அமைத்தனை கருத்துத்
தளருந் தன்மையிங் காரொடு புகலுவேன் தக்கோய். ௨

என்னைத் தான்இன்ன வண்ணமென் றறிகிலா ஏழை
தன்னைத் தான்அறிந் திடஅருள் புரிதியேல் தக்கோய்

பின்னைத் தாளின்றன் அருள்பெற்ற மாதவப் பெரியோர்
என்னைத் தாங்கிக ராரென வாழ்ந்தவர் நெறியால். ௩

ஏத மின்றிநின் அடியிணைக் கன்புதா னீட்டுங்
காத லன்பர்க்குக் கதிநிலை ஈதெனக் காட்டும்
போத நித்திய புண்ணிய எண்ணரும் புவன
நாத தற்பர நினையெவ்வா றுய்குவேன் நவிலாய். ௪

வேதம் எத்தனை அத்தனை சிரத்திலும் விளங்கும்
பாத நித்திய பரம்பர நிரந்தர பரம
நாத தற்பர சிற்பர வடிவமாய் நடிக்கும்
நீத நிர்க்குண நினையன்றி ஒன்றும்நான் நினையேன். ௫

நெறிகள் தாம்பல பலவுமாய் அந்தந்த நெறிக்காஞ்
செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தால்
அறியுந் தன்மையிங் காருனை அறிவினால் அறிந்தோர்
பிறியுந் தன்மையில் வாவகை கலக்கின்ற பெரியோய். ௬

பெரிய அண்டங்கள் எத்தனை அமைத்ததிற் பிறங்கும்
உரிய பல்லுயிர் எத்தனை அமைத்தவைக் குறுதி
வருவ தெத்தனை அமைத்தனை அமைத்தருள் வளர்க்கும்
அரிய தத்துவ எனக்கிந்த வண்ணமேன் அமைத்தாய். ௭

சுவைம தேறலின் காரணந் தன்னையே கருத்தில்
உணரு மாதவர்க் கானந்த உதவினை யொன்றுங்
குணமி லாதபொய் வஞ்சனுக் கெந்தைநிற் குணமா
மணரு மாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார். ௮

கன்னல் முக்கனி கண்டுதேன் சருக்கரை கலந்த
தென்ன முத்தியிற் கலந்தவர்க் கின்பமா யிருக்கும்
மன்ன நித்தநின் னற்பதந் துணையென நம்பச்
சொன்ன வர்க்கெனு லாக்கைம்மா றில்லைஎன் சொல்வேன். ௯

தந்தை தாய்தமர் மகவெனும் அவையெலாஞ் சகத்தில்
பந்தமாம் என்றே அருமறை வாயினாற் பகர்ந்த
எந்தை நீஎனை இன்னமவ் வல்லலில் இருத்தில்
சிந்தை தான்தெளிந் தெவ்வணம் உய்வனஞ் செப்பாய். ௰

துய்யன் தண்ணருள் வடிவினன் பொறுமையால் துலங்கும்
மெய்யன் என்றுனை ஐயனே அடைந்தனன் மெத்த
நொய்யன் நுண்ணிய அறிவிலன் ஒன்றைநூ றாக்கும்
பொய்ய னென்றெனைப் புறம்விடின் என்செய்வேன் புகலாய்.

ஒன்ற தாய்ப்பல வாய்உயிர்த் திரட்கெலாம் உறுதி
என்ற தாய்என்றும் உள்ளதாய் எவற்றினும் இசைய
நின்ற தாய்நிலை நின்றிடும் அறிஞான் நெஞ்சம்
மன்ற தாய்இன்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன். கஉ

தனியி ருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்
கினியி ரங்குதல் கடனிது சமயமென் னிதயக்
கனிவும் அப்படி யாயின தாதலாற் கருணைப்
புனித நீயறி யாததொன் றுள்ளதோ புகலாய். கங

திருந்து சீரடித் தாமரைக் கன்புநான் செய்யப்
பொருந்து நாள்நல்ல புண்ணியஞ் செய்யநாள் பொருந்தா
திருந்த நாள்வெகு தீவினை யிழைத்தநாள் என்றால்
அருந்த வாவுனைப் பொருந்துநாள் எந்நாள் அடிமை. கச

பின்னும் முன்னுமாய் நடுவுமாய் யாவினும் பெரிய
தென்னுந் தன்மையாய் எவ்வுயிர்த் திரளையும் இயக்கி
மன்னுந் தண்ணருள் வடிவமே உனக்கன்பு வைத்துந்
துன்னும் இன்னல்ஏன் யானெனும் அகந்தையேன் சொல்லாய்.

மின்னை யன்னபொய் வாழ்க்கையே நிலையென மெய்யாம்
உன்னை நான்மறந் தெவ்வணம் உய்வணம் உரையாய்
முன்னை வல்வினை வேரற முடித்தென்று முடியாத்
தன்னைத் தன்னடி யார்க்கருள் புரிந்திடுந் தக்கோய். கசு

எம்ப ராபர எம்முயிர்த் துணைவஎன் றிறைஞ்சும்
உம்பர் இம்பர்க்கும் உளக்கணே நடிக்கின்றாய் உன்றன்
அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணையென அடிமை
நம்பி னேன்இனிப் புரப்பதெக் காலமோ நவிலாய். கஎ

பாடி யாடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தனர் அமலநின் னடியர்யான் தொழும்பன்

நாடி யேறுந்த உலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன்வெறுந் தீமையே என்னினிச் செய்வேன். கஅ

களவு வஞ்சனை காமமென் றிவையெலாங் காட்டும்
அளவு மாயையிந் நாளெனக் கமைத்தனர் ஐயா
உளவி லேனெனக் குள்ளவா றுணர்த்தின்உன் அடிமை
வளரும் மாமதி போல்மதி தளர்வின்றி வாழ்வேன். கக

வான நாயக வானவர் நாயக வளங்கூர்
ஞான நாயக நான்மறை நாயக நலஞ்சேர்
மோன நாயக நின்னடிக் கன்பின்றி முற்றுந்
தீன னாய்அகம் வாடவோ என்செய்வேன் செப்பாய். உ௦

ஏத மற்றவர்க் கின்பமே பொழிகின்ற இறையே
பாத கக்கருங் கல்மனங் கோயிலாப் பரிந்து
சூத கத்தனை யாதினும் இச்சைமேல் தோன்றும்
வாதனைக்கிட மாயினேன் எவ்வணம் வாழ்வேன். உக

தெளிவொ டைகையோ அறிகிலான் அறிவிலான் சிறிதும்
அளியி லான்இவன் திருவருட் கபலென அறிந்தோ
எளிய னேற்கினே என்செய்வேன் என்செய்வேன் எல்லா
ஒளியு மாய்நிறை வெளியுமாய் யாவுமாம் உரவோய். உஉ

கன்னன் முன்மணி யென்னவே தொழும்அன்பர் கருத்துள்
மன்னு கின்றநின் அருளெனக் கெந்தநாள் எய்தும்
மண்ணும் விண்ணும்மற் றன்ன பூதமும் மாறுட்
பெண்ணும் ஆணுமாய் அல்லவாய் நிற்கின்ற பெரியோய். உங

சகமெ லாந்தனி புரந்தனை தகவுடைத் தக்கோர்
அகமெ லாங்கொளுந் தாளர்த மாயினை அளவில்
மகமெ லாம்புரிந் தோரைவாழ் வித்தனை மாறு
இகமெ லாமெனைப் பிறந்திடச் செய்ததேன் எந்தாய். உச

ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலாய் எளியேன்
வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணைநீ வளர்ப்பாய்
ஆய்ந்த மாமறை எந்தனை அந்தனை அறிவால்
தோய்ந்த பேர்கட்குந் தோன்றிலாத் தோன்றலாந் தூயோய்.

தூக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித் தமியேன்
மிக்க தெய்வமே நின்னின்ப வெள்ளத்தில் வீழேன்
ஒக்கல் தாய்தந்தை மகவெனும் பாசக்கட் டுடனே
துக்க வெள்ளத்தில் ஆழ்கின்றேன் என்செய்வான் துணிந்தேன்.

பவம்பு ரிந்திடும் பாவியேற் கருள்நிலை பதியத்
தவஞ்செ யும்படித் தயவுசெய் தருள்வதே தருமம்
அவம்பு ரிந்திடார்க் கானந்த அமிர்தத்தை அளிக்க
நவங்கொள் தத்துவத் திரையெறி கடலெனும் நலந்தோய்.

உற்று ணர்ந்ததெலாம் நீயல தில்லையென் றுனையே
பற்று கின்றனர் எந்தைநின் னடியர்யான் பாவி
முற்று மாயமாஞ் சகத்தையே மெய்யென முதல்தான்
அற்றி ருந்திடத் தொழில்செய்வான் நினைக்க லானேன். ௨௮

---

## ௨௯. மண்டலத்தின்

மண்டலத்தின் மிசையொருவன் செய்வித்தை யகோ வெனவும் வார ணாதி, அண்டமவை அடுக்கடுக்காய் அந்தரத் தில் நிறுத்துமவ தானம் போல, எண்தரும்நல் லகிலாண்ட கோடியைத்தன் அருள்வெளியில் இலக வைத்துக், கொண்டு நின்ற அற்புதத்தை எவராலும் நிச்சயிக்கக் கூடா ஒன்றை. ௧

ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந்தேழாம் யோக பூமி, நின்றுதெளிந் தவர்பேசா மௌனநியா யத்தை நிறை நிறைவைத் தன்னை, அன்றியொரு பொருளிலதாய் எப்பொருட்குந் தான்முதலாய் அசல மாகி, என்றுமுள்ள இன்பத்தைத் தண்ணென்ற சாந்தபத இயற்கை தன்னை. ௨

பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப் பரிசு காட்டிச், சதமாகி நிராலம்ப சாட்சியதாய் ஆரம்பத் தன்மை யாகி, விதம்யாவுங் கடந்தவித்தை யெனுமிருளைக் கீண் டெழுந்து விமல மாகி, மதமாறுங் காணாத ஆனந்த சாக ரத்தை மௌன வாழ்வை. ௩

வாழ்வனைத்துந் தந்தஇன்ப மாகடலை நல்லமிர்தை மணியைப் பொன்னைத், தாழ்வறஎன் உளத்திருந்த தத்துவத்தை அத்துவித சாரந் தன்னைச், சூழ்பெரும்பே ரொளியையொளி பரந்தபர வெளியைஇன்பச் சுகத்தை மாறு, தேழுலகுங் கலந்நின்றாய் நானேயா யென்றுமாம் இயற்கை தன்னை. ௪

தன்னையறிந் தவர்தம்மைத் தானாகச் செய்தருளுஞ் சமர்த்தை லோகம், மின்னைமிகர்ந் திடவழியாச் சொரூபானந் தச்சுடரை வேத மாதி, என்னையறி வரிதென்னச் சமயகோ டிகளிடைய இடையறாத, பொன்னைவிரித் திடுமுலகத் தும்பருமிம் பரும்பரவும் புனித மெய்யை. ௫

பரவரிய பரசிவமாய் அதுவெனலாய் நானெனலாய்ப் பாச சாலம், விரவிநின்ற விசித்திரத்தை ஐக்யபதத் தினிதிருந்த விவேகந் தன்னை, இரவுபகல் நினைப்புமறப் பெனுந் தொந்தம் அறியார்கள் இதயம் வேதச், சிரமெனவாழ் பராபரத்தை ஆனந்தம் நீங்காத சிதாகா சத்தை. ௬

அத்துவித அநுபவத்தை அனந்தமறை இன்னம்இன்னம் அறியேம் என்னும், நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தைத் தன்னருளால் நினைவுக்குள்ளே, வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தானாக எந்நாளும் வளர்த்துக் காக்குஞ், சித்தினையாத் ஆவெளியைத் தன்மயமாம் ஆனந்தத் தெய்வந் தன்னை. ௭

தன்னிலே தானாக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக சமாதியாகப், பொன்னிலே பணிபோலும் மாயைதரு மனமேஉன் புரைகள் தீர்ந்தாய், என்களிறே யான்பிழைப்பேன் எனக்கினியார் உன்போல்வார் இல்லை இல்லை, உன்னிலோ திருவருளுக் கொப்பாவாய் என்னுயிர்க்கோர் உறவு மாவாய். ௮

உறவுடலை எடுத்தவரில் பிரமாதி யேனும்உனை யொழிந்தா தள்ளற், கறவுமரி தரிதன்றே இகபரமும் உன்னையன்றி யாவதுண்டோ, வழிஇலுன்னை அசத்தென்னல் வழக்கன்று சத்தெனவும் வாழ்த்த வேனென், சிறுமை

கெடப் பெருமையினின் சென்மதே யத்தினில்நீ செல்லல்
வேண்டும். ௯

வேண்டியநாள் என்னோடும் பழகியநீ எனைப்பிரிந்து
விசாரத் தாலே, மாண்டுகிடக் கினும்அந்த எல்லையையும் பூர
ணமாய் வணக்கஞ் செய்வேன், ஆண்டகுரு மௌனிதன்
னால் யானெனதற் றவனருள்நான் ஆவேன் பூவிற், காண்டக
எண் சித்திமுத்தி எனக்குண்டாம் உன்னாலென் கவலை தீர்
வேன். க0

தீராத என்சனன வழக்கெல்லாந் தீருமிந்தச் சனனத்
தோடே, யாரேனும் அறிவரிய சீவன்முத்தி யுண்டாகும்
ஐய ஐயோ, காரேனுங் கற்பகப்பூங் காவேனும் உனக்குவமை
காட்டப் போமோ, பாராதி யாகஎழு மண்டலத்தில் நின்
மகிமை பகர லாமோ. கக

---

## உஎ. பாயப்புலி

பாயப் புலிமுன மான்கன்றைக் காட்டும் படிஅகில
மாயைப் பெரும்படைக் கேஇலக் காவெனை வைத்தனையோ
நீயெப் படிவருத் தாலுனன் றேநின் பெருங்கருணை
தாயொத் தடியர்க் கருள்சச்சி தானந்த தற்பரமே. க

தற்பர மாஞ்சிற் பரமாகி மன்றந் தனில்நடித்து
நிற்பர்அம் போருகன் மால்பணி நீதரென் நெஞ்சகமாங்
கற்பரந் தாங்கு கரைந்திட வானொத்த காட்சிநல்கும்
பொற்பர மாயென் வினைக்கருந் தாதைப் பொடிசெய்ததே. உ

செய்யுந் தவஞ்சற்று மில்லாத நான்உன் திருவடிக்கே
பொய்யும் புதுமல ரிட்டுமெய் யன்பர் குழாத்துடனே
கையுஞ் சிரமிசைக் கூப்பிநின் றாடிக் கசிந்துருகி
உய்யும் படிக்கருள் செய்வதென் றோபுலி யூரத்தனே. ௩

அத்தனைச் சித்தம் பலவினை யென்னுயி ராகிநின்ற
சுத்தனைச் சுத்தவெளியா னவனைச் சுகவடிவாம்
நித்தனை நித்த நிராதார மாகிய நின்மலனை
எத்தனை நாள்செல்லு மோமன மேகண் டிறைஞ்சுதற்கே. ௪

கண்டா ருளத்தினிற் காலூன்றிப் பெய்யுங் கருணைமுகில்
அண்டார் புரந்துக்கும் அன்பர் வினைக்கும் அசனிதன்னைக்
கொண்டாடி னார்முனங் கூத்தாடு மத்தன்றன் கோலமெல்லாம்
விண்டாலம் மாவொன்றுங் காணுது வெட்ட வெறுவெளியே.

வெளியான நீயென் மனவெளி யூடு விரவின்ஐயா
ஒளியாருங் கண்ணும் இரவியும் போல்நின் றுலாவுவன்காண்
அளியாருங் கொன்றைச் சடையாட அம்புலி யாடக்கங்கைத்
துளியாட மன்றுள் நடமாடும் முக்கட் சுடர்க்கொழுந்தே. ௬

கொழுந்தா துறைமலர்க் கோதையர் மோகக் குரைகடலில்
அழுந்தாத வண்ணம்நின் பாதப் புணைதந் தருள்வதென்றோ
எழுந்தா தரவுசெய் எம்பெரு மான்என் றிறைஞ்சி விண்ணோர்
தொழுந்தா தையேவெண் பொடிபூத்த மேனிச் சுகப்பொருளே.

சுகமாகு ஞானந் திருமேனி யாநல்ல தொண்டர்தங்கள்
அகமேபொற் கோயில் எனமகிழ்ந் தேமன்றுள் ஆடியகற்
பகமேஉன் பொன்னடி நிழல்கண் டாலன்றிப் பாவிக்கிந்தச்
செகமாயை யான அருங்கோடை நீங்குந் திறமிலையே. ௮

நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினையறிந்தே
தூங்காமல் தூங்கின்அல் லாதே எனக்குச் சுகமும்உண்டோ
ஓங்கார மாம்ஐந் தெழுத்தாற் புவனத்தை உண்டுபண்ணிப்
பாங்காய் நடத்தும் பொருளே அகண்ட பரசிவமே. ௯

சிவமாதி நான்முகக் கோவர்க்கு மாமறை செப்புகின்ற
நவமாய் இலங்கிய ஒன்றே இரண்டற்ற நன்மைபெரு
தவமே தருமறும் புலப்பொறிக் கேயென் னறிவுபொல்லாப்
பவமே விளைக்குமென் றேவெளி மாவெனப் பாய்ந்ததுவே.

ஆறுருக் கொண்டு சமயங்கள் ஆறாக்கும் ஆழ்கடலாய்
வீறிப் பரந்த பரமான ஆனந்த வெள்ளமொன்று

தேறித் தெளிந்து நிலைபெற்ற மாதவர் சித்தத்திலே
ஊறிப் பரந்தண்ட கோடியெல் லாம்நின் றலாவியதே. கக

நடக்கினும் ஓடினும் நிற்கினும் வேறொரு நாட்டமின்றிக்
கிடக்கினுஞ் செவ்வி திருக்கினும் நல்லருட் கேள்வியிலே
தொடக்குமென் னெஞ்சம் மனமற்ற பூரணத் தொட்டிக்குளே
முடக்குவன் யான்பர மானந்த நித்திரை மூடிடுமே. கஉ

எண்ணாத தெண்ணிய நெஞ்சே துயரொழி எண்ணிரண்டு
கண்ணே உறங்குக என்னுளே முக்கட் கருணைப்பிரான்
தண்ணார் கருணை மவுனத்தி னால்முத்தி சாதிக்கலாம்
நண்ணாத தொன்றில்லை யெல்லா நலமு நமக்குளவே. கந

நானென் றொருமுத லுண்டென்ற நான்நிலை நாணஎன்னுள்
தானென் றொருமுதல் பூரணமாகத் தலைப்பட்டபோதில்
ஆனந்தந் தந்தென் அறிவையெல் லாமுண் டகசங்கி
மோனந் தனைவிளைத் தால்இனி யாது மொழிகுவதே. கச

தானந் தவஞ்சற்றும் இல்லாத நான்உண்மை தானறிந்து
மோனம் பொருளெனக் கண்டிடச் சற்குரு மோனனுமாய்த்
தீனன் தனக்கிங் கிரங்கினை யேஇனிச் சிந்தைக்கென்றும்
ஆனந்தந் தானல்ல வோபர மேசச்சி தானந்தமே. கரு

எனக்கோர் சுதந்திர மில்லையப் பாஎனக் கெய்ப்பில் வைப்பாய்
மனக்கோ தகற்றும் பரம்பொரு ளேஎன்னை வாழ்வித்திட
நினக்கே பரம்என்னை நீங்காத பூரண நீள்கருணை
தனக்கே பரம்இனிச் சும்மா விருக்கத் தகுமென்றுமே. கசு

இடம்பெறு வீடும்மின் னார்சேய் சகமும் இருநிதியும்
உடம்பைவிட் டாருயிர் போம்போது கூடி உடன்வருமோ
மடம்பெறு மாயை மனமே இனியிங்கு வாமவுனி
திடம்பெற வைத்த மவுனஞ் சகாயந் தெரிந்து கொள்ளே.

நாற்றச் சடலத்தை ஒன்பது வாசல் நடைமனையைச்
சோற்றுப் பசையினை மும்மல பாண்டத் தொடக்கறையை
ஆற்றுப் பெருக்கன்ன கன்மப் பெருக்கை அடர்கிருமிச்
சேற்றைத் துணையென்ற நாய்க்குமுண் டோகதி சேர்வதுவே.

சத்த மவுன முதல்மூன்று மவுனமுந் தான்படைத்தேன்
நித்த மவுனமல் லாலறி யேன்மற்றை நிட்டைகளே. ௨௬

கண்டேன் நினதருள் அவ்வரு ளாய்நின்று காண்பதெல்லாம்
உண்டே யதுவும் நினதாக்கி னேன்உவட் டாதஇன்பம்
மொண்டே அருந்தி இளைப்பாறி னேன்நல்ல முத்திபெற்றுக்
கொண்டேன் பராபர மேயெனக் கேதுங் குறைவில்லையே.

மேற்கொண்ட வாயுவுங் கீழ்ப்பட மூலத்து வெந்தழலைச்
சூற்கொண்ட மேக மெனவூமை நின்று சொரிவதைஎன்
னூற்கண்ட தன்று மவுனோப தேசிய விக்கையினிப்
பார்கண்டு கொண்டனன் மேலே அமிர்தம் பருகுவனே.

சொல்லால் தொடர்பொரு ளால்தொட ராப்பரஞ் சோதிநின்னை
வல்லாளர் கண்ட வழிகண்டி லேன்சக மார்க்கத்திலுஞ்
செல்லாதென் சிந்தை நடுவே கிடந்து திகைத்துவிம்மி
அல்லான துப்பக லானதும் வாய்விட் டரற்றுவனே. ௨௯

அறியாத என்னை அறிவாயம் நீயென் றகம்புறமும்
பிரியா தறிவிந்த போறி வாஞ்சுத்தப் பேரொளியோ
குறியாத ஆனந்தக் கோவோ அமுதருள் குண்டலியோ
சிறியேன் படுந்துயர் கண்டுகல் லால்நிழற் சேர்ந்ததுவே. ௩௦

எல்லாம் உதவும் உனையொன்றிற் பாவனை யேனுஞ்செய்து
புல்லா யினும்ஒரு பச்சிலை யாயினும் போட்டிறைஞ்சி
நில்லேன் நல்யோக நெறியுஞ்செ யேன்அருள் நீதியொன்றுங்
கல்லேன்எவ் வாறு பரமே பரகதி காண்பதுவே. ௩௧

ஒன்றுந் தெரிந்திட இல்லைஎன் னுள்ளத் தொருவஎனக்
கென்றுந் தெரிந்த இவைஅவை கேள்இர வும்பகலுங்
குன்றுங் குழியும் வனமும் மலையுங் குரைகடலும்
மன்றும் மனையும் மனமாதி தத்துவ மாயையுமே. ௩௨

பழுதுண்டு பாவையர் மோக விகாரப் பரவையிடை
விழுகின்ற பாவிக்குந் தன்தாள் புணையை வியந்தளித்தான்
தொழுகின்ற அன்ப ருளங்களி கூரத் துலங்குமன்றுள்
எழுகின்ற ஆனந்தக் கூத்தனென் கண்மணி யென்னப்பனே.

அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக்கை யாநின் அருள்வழங்கின்
இழுக்காகு மென்றெண்ணி யோ இரங்காத இயல்புகண்டாய்
முழுக்காத லாகி விழிநீர் பெருக்கிய மூத்தவொனுங்
குழுக்காண நின்று நடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே. ௫௪

ஆலம் படைத்த விழியார்கள் மால்கொண் டவர்செய் இந்த்ர
சாலம் படைத்துத் தளர்ந்தனே யேயென்றுந் தண்ணருள்கூர்
கோலம் படைத்துக்கல் லாலடிக் கீழ்வைகுங் கோவுக்கன்பாங்
காலம் படைக்கத் தவம்படை யாதென்கொல் கல்நெஞ்சமே.

சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டும் அறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பிஎன் பேதைமையால்
வெம்மாயக் காட்டில் அலைந்தேன் அந்தோஎன் விதிவசமே.

தினமே செலச்செல வாழ்நாளும் நீங்கச் செகத்திருள்சொப்
பனமே யெனவெளி கண்டே யிருக்கவும் பாசபந்த
இனமே துணையென் றிருந்தோம் நமன்வரின் என்செய்குவோம்
மனமே நம்போல வுண்டோ சுத்தமூடரிவ் வையகத்தே. ௫௭

கடலெத் தனைமலை எத்தனை அத்தனை கன்மமதற்
குடலெத் தனையத் தனைகடல் நுண்மணல் ஒக்குமிந்தச்
சடலத்தை நான்விடு முன்னே யுனைவந்து சாரஇருட்
படலத்தை மாற்றப் படாதோ நிறைந்த பராபரமே. ௫௮

நினையும் நினைவும் நினையன்றி யில்லை நினைத்திடுங்கால்
வினையென் றொருமுதல் நின்னையல் லாது விளைவதுண்டோ
தனையுந் தெளிந்துன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச்செந் தாமரையாம்
மனையும்பொன் மன்றமும் நின்றாடுஞ் சோதி மணிவிளக்கே.

உள்ளத் தையுமிங் கெனையுநின் கையினில் ஒப்புவித்தும்
கள்ளத்தைச் செய்யும் வினையால் வருந்தக் கணக்குமுண்டோ
பள்ளத்தில் வீழும் புனல்போற் படிந்தன் பாயஇன்ப
வெள்ளத்தின் மூழ்கினர்க் கேவெளி தானில்லை வித்தகனே.

கள்ளம் பொருந்தும் மடநெஞ்ச மேகொடுங் காலர்வந்தால்
உள்ளன் பவர்கட்குண் டோஇல்லை யேயுல கீன்றஅன்னை

வள்ளம் பொருந்து மலரடி காணமன் றுநிற்கஇன்ப
வெள்ளச்செம் பாதப் புணையெயல் லாற்கதி வேறில்லையே.

தன்மய மானசு பாவத்தில் மெள்ளத் தலைப்படுங்கால்
மின்மய மான சகப்பிரா ந்தியைத்தென் வெளியில்உய்த்த
சின்மய முத்திரைக் கையேமெய் யாகத் தெளிந்தநெஞ்சே
நின்மயம் என்மயம் எல்லாம் நிறைந்த நிராமயமே. ௪௨

ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியவனைத்
தோயும் படிக்குக் கருணைசெய் வாய்சுக வான்பொருளே
தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுதலும்
நீயும் பரையுமென் றேயுணர்ந் தேனிந் நிச்சயமே. ௪௩

அல்லும் பகலும் உனக்கே அபயம் அபயமென்று
சொல்லுஞ்சொல் லன்றித் தெரிந்ததன் றேஅறிப்பார்க்கு மனக்
கல்லுங் கரைந்தும் மகனே உனது கருணைஎன்பால்
செல்லும் பொழுதல்ல வோசெல்லு வேனந்தச் சிற்சுகத்தே.

எல்லாஞ் சிவன்செயல் என்றறிந் தாலவன் இன்னருளே
அல்லாற் புகலிடம் வேறுமுண் டோஅது வேநிலையா
நில்லாய்உன் றல்லற் பெயர்க்குக் கதியுண்மை நீள்நிலத்தில்
பொல்லா மயக்கத்தி லாழ்ந்தாவ தென்ன புகல்நெஞ்சமே.

ஒளியே ஒளியின் உணர்வே உணர்வின் உவகைபொங்குங்
களியே களிக்குங் கருத்தே கருத்தைக் கவளங்கொண்ட
வெளியே வெளியின் விளாசுக மேசுகர் வீறகண்டுந்
தெளியேன் தெளிந்தவரைப் போற்றிடேன் என்ன செய்குவனே.

மறக்கின்ற தன்மை இறத்தலொப் பாகும் மனமதொன்றில்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பாகும்இப் பேய்ப்பிறவி
இறக்கின்ற எல்லைக் களவில்லை யேஇந்தச் சன்மஅல்லல்
துறக்கின்ற நாளெந்த நாள்பர மேநின் தொழும்பனுக்கே.

காட்டிய அந்தக் கரணமும் மாயைஇக் காயமென்று
சூட்டிய கோலமும் நானு வியங்கத் துறையிதனுள்
நாட்டிய நான்றனைக் கென்றோர் அறிவற்ற நான்இவற்றைக்
கூட்டிநின் றூட்டினை யேபர மேநல்ல கூத்திதுவே. ௪௮

பொல்லாத மாமர்க் கடமனை மேனைப் போல்அடுத்த
எல்லாவற் றையும்பற் றிக்கொண் டனையே யென்னை நின்மயமா
நில்லாய் அருள்வெளி நீநான்நிற் பேன்அருள் நிட்டையொரு
சொல்லாற் பதிந்த பரிபூர ணானந்தந் தோய்குவனே. சகூ

வாராய்நெஞ் சேயுன்றன் ஞான்மார்க்கம் யாவையும்
வைத்துக்கட்டிக், காராய் அடிக்கடி சுற்றுகின் றாயுன் அவல
மதிக், கோரா யிரம்புத்தி சொன்னாலும் ஓர்கிலை ஓகெடுவாய்,
பாரா யினிச்சொல்லு வேன்வெல்லு வேன்அருட் பாங்கு
கொண்டே. ருo

மாதத்தி லேயொரு பிங்கள னாகி மடிவதைநின்
போதத்தி லேசற்றும் வைத்திலே யேவெறும் புன்மைநெஞ்சே
வேதத்தி லேசார்ந்த பாதத்தி லேவிளங் காதவிந்து
நாதத்தி லேயடங் காதந்த வான்பொருள் நாடிக்கொள்ளே.

எங்கும் வியாபித் துணர்வாய் உனக்கென் இதயத்துள்ளே
தங்குந் துயரந் தெரியாத வண்ணந் தடைசெய்ததார்
அங்கம் குழைந்துள் ளுருகுமன் பாளர்க் கணைகடந்து
பொங்கும் கருணைக் கடலேசம் பூரண போதத்தனே. ருஉ

வையக மாதர் சுகத்தையும் பொன்னையும் மாயைமல
மெய்யையும் மெய்யென்ற நின்னடி யார்தம் விவேகத்தையும்
ஐயவிவ் வீட்டையும் மெய்ந்நூலை யும்பொய்ய தாகஎண்ணும்
பொய்யர்தங் கட்டை விடுவதென் றோபரி பூரணமே. ருங

அளியுங் களியொத் தருவினை யால்நொந் தயர்வுறுவேன்
தெளியும் படிக்குப் பரிபாக காலமுஞ் சித்திக்குமோ
ஒளியுங் கருணையும் மாறாத இன்பமும் ஓருருவாய்
வெளியங் கடியவர் களிக்கநின் றாடும் விழுப்பொருளே. ருச

அடையார் புரஞ்செற்ற தேவேநின் பொன்னடிக் கன்புசற்றும்
படையாத என்னைப் படைத்திந்தப் பாரிற் படர்ந்தவினைத்
தடையால் தனியிட்டு நெஞ்சம்புண் ணாகத் தளரவைத்தாய்
உடையாய் உடைய படியன்றி யான்செய்த தொன்றிலையே.

ஆடுங் கறங்குந் திரிகையும் போல அலைந்தலைந்து
காடுங் கரையுந் திரிவதல் லால்நின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவமுய லாத கொடியர்எமன்
தேடும் பொழுதென்ன செய்வார் பரானந்த சிற்சுடரே. ௫௬

கற்றும் பலபல கேள்விகள் கேட்டுங் கறங்கெனவே
சுற்றுந் தொழில்கற்றுச் சிற்றின்பத் தூடு சுழலின்என்றுங்
குற்றங் குறைந்து குணமே லிடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண் டாய்சுத்த மூடநெஞ்சே. ௫௭

நீயென நானென வேறில்லை யென்னும் நினைவருளத்
தாயென மோன குருவாகி வந்து தடுத்தடிமைச்
சேயெனக் காத்தனை யேபர மேநின் திருவருளுக்
கேயென்ன செய்யுங்கைம் மாறுள தோசுத்த ஏழையனே.

ஆத்திரம் வந்தவர் போல்அலை யாமல் அரோகதிட
காத்திரந் தந்தென்னை யேஅன்னை போலுங் கருணைவைத்திம்
மாத்திரம் முன்னின் றுணர்த்தினை யேமவு னாஇனிநான்
சாத்திரஞ் சொன்ன படிஇய மாதியுஞ் சாதிப்பனே. ௫௯

---

## ௨௮. உடல்பொய்யுறவு

உடல்பொய் யுறவாயின் உண்மை யுறவாகக்
கடவாரார் தண்ணருளே கண்டாய்—திடமுடனே
உற்றுப்பார் மோனன் ஒருசொல்லே உண்மைநன்றாய்
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ். ௧

பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கால் அப்பாத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்—நேராக
நிற்குந் திருவருளில் நெஞ்சேயாம் நிற்பதல்லால்
கற்குநெறி யாதினிமேற் காண். ௨

மெய்யான தன்மை விளங்கினால் யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ—ஐயாவே
மன்னும்நி ராசைஇன்னம் வந்ததல்ல உன்னடிமை
என்னும்நிலை எய்துமா றென். ௩

அறியாமை மேவிட் டறிவின்றி நிற்குங்
குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயாம்
நீயுணர்த்த நான்உணரும் நேசத்தா லோஅறிவென்
றேயெனக்கோர் நாமமிட்ட தே. ௪

ஏதுக்குச் சும்மா இருமனமே என்றுனக்குப்
போதித்த உண்மைஎங்கே போகவிட்டாய்—வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னையேயுன்
புந்தியென்ன போதமென்ன போ. ௫

சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தால் துக்க
சுகமனைத்தும் பொய்யன்றோ சோரா—திகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான அத்துவிதக்
கட்டுக்குள் ஆவதென்றோ காண். ௬

கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோஎன்
சொற்கண்டா தேதெனநான் சொல்லுவேன்—விற்கண்ட
வான மதிகாண மவுனிமவு னத்தளித்த
தானமதி லூறும்அமிர் தம். ௭

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்
வாட்டமறா வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம். ௮

மாயா சகத்தை மறியாதார் மண்முதலா
யேயான தத்துவத்தில் எய்துவரோ—நேயானு
பூதியிலே நிற்கப் பொருந்துவர்கள் அன்னவர்தம்
நீதியையே ஓர்மனமே நீ. ௯

ஜகமுழுதும் பொய்யெனவே எய்ந்துணர்ந்தா லாங்கே
மிகவளர வந்தஅருள் மெய்யே—அகநெகிழப்

பாரீர் ஒருசொற் படியே அனுபவத்தைச்
சேரீர் அதுவே திறம். ௧௦

ஆரணங்கள் ஆகமங்கள் யாவுமே ஆனந்த
பூரணமே உண்மைப் பொருளென்னும்—காரணத்தை
ஓராயோ அன்றுள்ளே உற்றுணர்ந்தவ் வுண்மையினைப்
பாராயோ நெஞ்சே பகர். ௧௧

நேராய மவுனநிலை நில்லாமல் வாய்பேசி
ஆராய் அலைந்தீர்நீர் ஆகெடுவீர்—தேரீர்
திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவால்
கரையுங் கரையுமனக் கல். ௧௨

அற்ப மனமே அகிலவாழ் வத்தனையுஞ்
சொற்பனங்கண் டாயுண்மை சொன்னேன்நான்—கற்பனையொன்
றில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக்
கல்லாய்நீ தானோர் கவி. ௧௩

ஏதுந் திருவருளின் இச்சையாம் என்றென்றெப்
போதும் பொருந்தும் புனிதர்பால்—தீதுநெறி
செல்லுமோ செல்லாதே செல்லுமிடம் இன்பமலால்
சொல்லுமோ வேதத் தொனி. ௧௪

கல்லேனுஞ் சில்லேனுங் கட்டியே றும்போலச்
சொல்லேறப் பாழ்த்த துளைச்செவிகொண்—டல்லேறு
நெஞ்சனென நீக்கவைத்தாய் நீதியோ தற்பரமே
வஞ்சனல்லேன் நீயே மதி. ௧௫

அப்பொருளும் ஆன்மாவும் ஆரணநூல் சொன்னபடி
தப்பில்லாச் சித்தொன்றுஞ் சாதியினால்—எப்படியுந்
தேரில் துவிதஞ் சிவாகமமே சொல்லுமிட்டை
ஆருமிடத் தத்துவித மாம். ௧௬

வேத முதலாய் விளங்குஞ் சிவவடிவாம்
போத நிலையிற் பொருந்தாமல்—எதமிகு
மோகாதி அல்லலிலே மூழ்கினையே நெஞ்சேஇத்
தேகாதி மெய்யோ தெளி. ௧௭

நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநிலை
தாக்கற் றுபாயஞ் சமைந்தபிரான்—காக்குமுயிர்
அத்தனைக்கும் நானடிமை ஆதலினால் யானெனதென்
றித்தனைக்கும் பேசஇட மில். ௧௮

ஒன்றாமற நில்லென் றுணர்த்தியநம் மோனகுரு
தன்னிணைத்தாள் நீடூழி தாம்வாழ்க—என்றென்றே
சிந்தனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்மையர்க்கே
கைக்குவரும் இன்பக் கனி. ௧௯

மனத்தாலும் வாக்காலும் மன்னவொண்ணா மோன
இனத்தாரே நல்ல இனத்தார்—கனத்தபுகழ்
கொண்டவரும் அன்னவரே கூறரிய முத்திநெறி
கண்டவரும் அன்னவரே காண். ௨௦

கண்ணொளியே மோனக் கரும்பே கவலையறப்
பண்ணொளிக்கும் உள்ளொளியாம் பான்மையினை—நண்ணிடவுஞ்
சித்த மிரங்கிலதென் சித்தந் தெளியாவே
றித்தனைக்கும் ஆதரவும் இல். ௨௧

அறியாமை சாரின் அதுவாய் அறிவாம்
நெறியான போததுவாய் நிற்குங்—குறியால்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய். ௨௨

குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி
ஒருவொன்ற மேனிநம்பாற் காட்டா—தருளென்று
கண்டவர்க்கே ஆனந்தங் கண்டுகொள லாம்அலது
கொண்டவர்க்கிங் கென்னகிடைக் கும். ௨௩

புலியின் உரியுடையான் பூதப் படையான்
பலியிரக்கும் எல்லாம் பரிப்பான்—மலிபுனல்சேர்
பொன்முடியான் முக்கட் புனிதன் சரண்புகுந்தோர்க்
கென்முடியா தேதுமுள தே. ௨௪

சொல்லுஞ் சடங்காச் சுகப்பொருளை நாமெனவே
அல்லும் பகலும் அரற்றுவதென்—நல்லசிவ

ஞானமயம் பெற்றோர்கள் நாமில்லை என்பர்அந்தோ
மோனமய மான முறை. ௨௫

ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்
சாற்றறிதென் றேசற்றூர் தன்னையாய் முக்கண்எந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னன். ௨௬

காதற்றுப் போனமுறி கட்டிவைத்தால் ஆவதுண்டோ
தீதற்ற காயமும்அச் செய்கையே—போதமாய்
நிற்பரல்லால் இச்சகத்தில் நேராகள் நேர்ந்திடினுந்
தற்பரமாக் கண்டிருப்பார் தாம். ௨௭

வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினன்
கள்ளங் குலாவு வஞ்சக் கள்ளனேன்—உள்ளத்தில்
இல்லனென்றால் அன்னவன்றான் எங்கும் வியாபகத்தான்
அல்லனென் றுஞ் சொல்லவழக் காம். ௨௮

தத்துவப்பே யோடே தலையடித்துக் கொள்ளாமல்
வைத்தஅருள் மோன வள்ளலையே—நித்தம்அன்பு
பூணக் கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்பும்
காணத் துடிக்குமிரு கண். ௨௯

தொல்லைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற நானொருவன்
எல்லையிலா நின்கருணை எய்துவனோ—வல்லவனும்
மோன குருவே முழுதினையுந் தானுணர்ந்த
ஞான குருவே நவில். ௩௦

மூன்றுகண்ணு முத்தொழிலா மும்முதலா மூவுலகுந்
தோன்றக் கருணைபொழி தோன்றலே—ஈன்றஅன்னை
தன்னைப்போல் அன்பு தழைத்தோய் ஒருதெய்வம்
உன்னைப்போ லுண்டோ வுரை. ௩௧

நேசிக்குஞ் சிந்தை நினைவுக்குள் உன்னைவைத்துப்
பூசிக்குந் தான்நிறைந்து பூரணமாய்—யோசித்து
நின்றதல்லால் மோனநிருவிகற்ப நிட்டைநிலை
என்றுவரு மோஅறியே னே. ௩௨

அறிவில் அறியாமை அற்றறிவாய் நின்று
பிறிவறஆ னந்தமயம் பெற்றுக்—குறியவிழ்ந்தால்
அன்றைக் குடல்வேண்டேன் ஐயாஇவ் ஆக்கையையே
என்றைக்கும் வேண்டுவனே யான். ௫௩

உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல்
விடவிடவே வாடுவரோ மெய்யைப்—படபடென
வேண்டுவேன் இந்தவுடல் மெய்யுணராப் பொய்யன்நான்
ஆண்டநீ தானே அறி. ௫௪

அறியாயோ என்னையுநீ ஆண்டநீ சுத்த
வெறியாய் மயங்கவுமேன் விட்டாய்—நெறிமயங்கிக்
குன்றுஞ் செடியுங் குறுகுமோ ஐயாவே
கன்றுகெட்டால் தாயருகே காண். ௫௫

ஏறாக் குடற்சுமைகொண் டேனிருந்தேன் ஐயனே
ஆறிக்க மோன அருள்தாயே—சோதியாம்
மன்ன நிருவிகற்ப ஆனந்த நிட்டையிலே
பின்னமற நில்லாத பின். ௫௬

பின்னும் உடற்சுமையாப் பேசும் வழக்கதனால்
என்னபயன் நாமுற் றிருந்தோமே—அன்னதனால்
ஆனந்தந் தானேதா னுறுமெம் மையனே
ஏனிந்தத் துன்பம் இனி. ௫௭

துன்பக் கடலில் துளைந்ததெலாந் தீர்ந்ததே
இன்பக் கடலில் இருமென்ன—அன்பில்
கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்துவரும் ஆனந்த மே. ௫௮

கரைந்து கரைந்துருகிக் கண்ணீரா றாக
விரைந்தே நிருவிகற்ப மெய்த—நிரந்தரமும்
நின்னையே சிந்திக்க நீகொடுத்தாய் மோனநான்
என்னைமுழு துங்கொடுத்தே னே. ௫௯

அன்றும் பதறும்பே ரன்புடனே தானிருந்தால்
என்றும் உருகாதோ கல்நெஞ்சே—பொல்லாத

தப்புவழி என்னினைத்தாய் சந்ததமும் நீஇறந்த
எய்ப்பிலே ஆனந்த மே. ௪௰

கொடுத்தேனே யென்னைக் கொடுத்தவுடன் இன்பம்
மடுத்தேனே நீடூழி வாழ்ந்தே—அடுத்தேனே
பெற்றேனே பெற்றுப் பிழைத்தேனே சன்மஅல்லல்
இற்றேனே ஏழைஅடி யேன். ௪௧

பெற்றோம் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றோம் எனவுரைக்கக் காரியமென்—சற்றேனும்
நீக்கற்ற இன்ப நிலைபொருந்தி ஏசற்று
வாக்கற்றார் பேசுமோ வாய். ௪௨

காலன் தனையுதைத்தான் காமன் தனையெரித்தான்
பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை—ஞாலமெச்சப்
பின்னே நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்
கென்னே நடக்கை யினி. ௪௩

விண்ணருவி மேன்மேல் விளங்குவபோ லேஇரண்டு
கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித்—தண்ணமிர்த
வெள்ளமே ஆனந்த வெற்பே எனத்தொழுவோர்
உள்ளமே ஞான வொளி. ௪௪

பிள்ளைமதிச் செஞ்சடையான் பேசாப் பெருமையினான்
கள்ளவிழும் பூங்கொன்றைக் கண்ணியான்—உள்ளபடி
கல்லாலின் கீழிருந்து கற்பித்தான் ஓர்வசனம்
எல்லாரும் ஈடேற வே. ௪௫

புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை
அலமந் துழலும் அடிமை—நலமிகுந்த
சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே
பித்தானால் உண்டோ பிறப்பு. ௪௬

நிறைகுடந்தான் நீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்—பிறையணிந்த
மிக்ககயி லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு. ௪௭

தங்கமழு மாலுடையாய் சூலப் படையுடையாய்
திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய்—மங்கையொரு
பாலுடையாய் செங்கட் பணியாய்என் சென்னியின்மேல்
காலுடையாய் நீயே கதி. ச அ

இனிய கருணைமுகில் எம்பிரான் முக்கட்
கனியமிர்து வாரியின்பக் கட்டி—தனிமுதல்வன்
நித்தன் பரமன் நிமலன்நிறை வாய்நிறைந்த
சுத்தன்நமக் கென்றுந் துணை. சகூ

நீதியாய்க் கல்லாலின் நீழலின்கீ ழேயிருந்து
போதியா உண்மையெல்லாம் போதித்தான்—ஓதில்
சனகாதி யாய தவத்தோர்க்கு ஞான
தினகரனும் மவுன சிவன். ருO

நேசச் செயல்நாளுஞ் சிந்தையுட னேகுழையில்
யோகத்தே ஞானிகளுக் கொப்புவதோ—மோகநிலை
அல்லலிலே வாழ்வாரோ அப்பனே நீயற்ற
எல்லையிலே சும்மா இரு. ருக

சும்மா இருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி யேனடா—தம்மறிவின்
சுட்டாலே யாருமோ சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ. ருஉ

நீயற்ற அங்கேயே நிட்டையதில் தீயிலையோ
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலும் நீபோதா வென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே இன்பமுண்டு வா. ருங

வாவாவென் றின்பம் வரவழைக்குங் கண்ணனோ
டாவாவென் றேயழுத அப்பனே—நீவாடா
எல்லாம் நமக்கெனவே எந்தனையே எந்தபடி
நில்லாய் அதுவே நிலை. ருச

நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்
சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே—கல்லாத

சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால்
வந்தவழி நல்ல வழி. ருரு

வழியிதென் றும் அல்லா வழியிதென் றுஞ் சொல்லில்
பழிபழியாம் நல்லருளாற் பார்த்தோர்—மொழியுனக்கே
ஏற்றிருக்கச் சொன்னவன்றே எங்கும் பெருவெளியாம்
பார்த்தவிட மெல்லாநீ பார். ருசு

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கை அரிதரிது—நேரே
மனத்துறவும் அப்படியே மாறா இவற்றில்
உனக்கிசைந்த வாறென்றே ஓர். ருஎ

ஓராம லொருகால் உன்னாமல் உள்ளொளியைப்
பாராமல் உள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந் தானந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான். ருஅ

தானா தன்மைவந்து தாக்கினால் அவ்விடத்தே
வானாதி மாயை வழங்காதோ—ஞானாகேள்
உன்னுள்ளே தோன்றா வுறவாகி நின்றதென
என்னுள்ளே யென்று மிரு. ருகூ

என்னையுன்னை இன்னதிது என்னாமல் நிற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தில்—அன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டாய் ஐயனே
உள்ளத்தின் உள்ளே உணர். சுO

சொன்னவர்தாம் நிட்டை தொகுத்திரார் நிட்டையிலே
மன்னினவர் போதியார் மாமவுனன்—தன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்க வடநீழல்
இருப்பான் நிருவிகற்பத் தே. சுக

இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேறாய் செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடல்அல்லால்
ஆடுவதேன் ஆட்டு மவன். சுஉ

அவனே பரமும் அவனே குருவும்
அவனே அகில மனைத்தும்—அவனேதாம்
ஆனவரே சொன்னால் அவரே குருவெனக்கு
நான் அவனாய் நிற்பதெந்த நாள். ௬௩

நாளவங்கள் போகாமல் நாள்தோறும் நந்தமையே
ஆளவந்தார் தாளின்கீழ் ஆட்புகுந்தாய்—மீளஉன்னைக்
காட்டாமல் நிற்குங் கருத்தறிந்தால் நெஞ்சேஉன்
ஆள்தானு னையமில்லை யால். ௬௪

யான்தான் எனல்அறவே இன்பநிட்டை என்றருணைக்
கோனன் றுரைத்தமொழி கொள்ளாயோ—தோன்றி
இழுக்கடித்தாய் நெஞ்சேநீ என்கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய். ௬௫

எங்குஞ் சிவமே இரண்டற்று நிற்கில்நெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே—அங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம். ௬௬

மெய்யைப்பொய் என்றிடவும் மெய்யனையாய்ப் பொய்ந்நெஞ்சே
பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ—ஐயமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையேல் ஆனந்தம்
என்மயமும் நின்மயமு மே. ௬௭

பூங்கா வனநிழலும் புத்தமுதுஞ் சாந்தபதம்
வாங்காரு ஆனந்த மாமழையும்—நீங்காவாஞ்
சொல்லிறந்த மாண்டவர்போல் தாமவுன பூமியினான்
இல்லையென நின்ற இடம். ௬௮

இடங்காணம் நல்லபொரு ளின்பம் எனக்கேவல்
அடங்காக் கருவி அனைத்தும்—உடனுதவ
மந்தார தாருவென வந்த மவுனகுரு
தந்தானோர் சொற்கொண்டு தான். ௬௯

தானந் தவஞ்ஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி
ஆனவையெல் லாந்தாமே யாகுமே—மோனகுரு

சொன்னவொரு சொல்லாற் சுகமா யிருமனமே
இன்ன மயக்கமுனக் கேன். ௭௦

உன்னை உடலை உறுபொருளைத் தாஎனவே
என்னை அடிமைக் கிருத்தினன்—சொன்னஒரு
சொல்லை மறவாமல் தோய்ந்தால்நெஞ் சேஉன்றல்
இல்லை பிறப்பதெனக் கே. ௭௧

எனக்கும் உனக்கும்உற வில்லையெனத் தேர்ந்து
நினைக்கஅரி தானஇன்ப கிட்டை—தனைக்கொடுத்தே
ஆசான் மவுனி அளித்தான்நெஞ் சேஉனையோர்
காசா மதியேன்நான் காண். ௭௨

ஆனந்த மோனகுரு வாமெனவே என்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதால்—தேனுந்து
சொல்லெல்லாம் மோனந் தொழிலா தியும்மோனம்
எல்லாம்நல் மோனவடி வே. ௭௩

எல்லாமே மோனநிறை வெய்துதலால் எவ்விடத்தும்
நல்லார்கள் மோனநிலை நாடினர்—பொல்லாத
நானெனஇங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோன குருவே. ௭௪

மோன குருவளித்த மோனமே யானந்தம்
ஞானம் அருளுமது நானுமது—வானாதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
என்றறிந்தேன் ஆனந்த மே. ௭௫

அறிந்த அறிவெல்லாம் அறிவன்றி யில்லை
மறிந்தமனம் அற்ற மவுனஞ்—செறிந்திடவே
நாட்டினன் ஆனந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினன் மோன குரு. ௭௬

குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னே மோனா
உருநீ டுயிர்பொருளு மொக்கத்—தருதியென
வாங்கினையே வேறும்உண்மை வைத்திடவுங் கேட்டிடவும்
ஈங்கொருவர் உண்டோ இனி. ௭௭

இனிய கருப்புவட்டை என்றெனவி விட்டான்
கனியிரத மாறாது நாளுந்—தனியிருக்கப்
பெற்றிலேன் மோனம் பிறந்தஅன்றே மோனமல்லால்
கற்றிலேன் ஏதுங் கதி. ௭௮

ஏதுக்குஞ் சும்மா இருநீ எனவுரைத்த
சூதுக்கோ தோன்றாத் துணையாகிப்—போதித்தா
நின்றதற்கோ என்னையா நீக்கிப் பிரியாமல்
கொன்றதற்கோ பேசாக் குறி. ௭௯

குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட ஆங்கே—பிறிவறவுஞ்
சும்மா இருத்திச் சுகங்கொடுத்த மோனநின்பால்
கைம்மாறு நானொழிதல் காண். ௮௦

நான்றான் எனுமயக்கம் நண்ணுங்கால் என்றுணை
யான்றான் எனக்கிறைய மாட்டாய்நீ—ஊன்றாமல்
வைத்தமவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடும் ஞான சுகம். ௮௧

ஞானநெறிக் கேற்றகுரு நண்ணரிய சித்திமுத்தி
தானந் தருமந் தழைத்தகுரு—மானமொடு
தாயெனவும் வந்தென்னைத் தந்தகுரு என்சிந்தை
கோயிலென வாழுங் குரு. ௮௨

சித்தஞ் சடமுஞ் சிவத்தைவிட இல்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்—சுத்தநிலை
பெற்றேமே நெஞ்சே பெரும்பிறவி சாராமல்
கற்றேமே மோனக் கரு. ௮௩

## ௨௧. ஏசற்ற அந்நிலை

ஏசற்ற அந்நிலையே எந்தைபரி பூரணமாய்
மாசற்ற ஆனந்த வாரி வழங்கிடுமே
ஊசற் சுழல்போல் உலகநெறி வாதனையால்
பாசத்துட் செல்லாதே பல்காலும் பாழ்நெஞ்சே.

பாழாகி அண்டப் பரப்பைஎலாம் வாய்மடுத்தும்
ஆழாழி இன்பத் தழுந்தப் படியாயோ
தாழாயோ எந்தையருள் தாள்கீழ்நெஞ் சேஎனைப்போல்
வாழாது வாழ்ந்துழியா வண்ண மிருப்பாயே.

இருப்பாய் இருந்திடப்பே ரின்பவெளிக் கேநமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
அருட்பாய் நமக்காக ஆளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே.

வஞ்சமோ பண்டையுள வாதனையால் நீ அலைந்து
நொஞ்சமுற் றாயுன்னைக் குறைசொல்ல வாயுமுண்டோ
அஞ்சல்அஞ்சல் என்றிரங்கும் ஆனந்த மாகடற்கீழ்
நெஞ்சமே என்போல நீயழுந்த வாராயோ.

வாரா வரவாய் வடநிழற்கீழ் வீற்றிருந்த
பூராயம் நம்மைப் புலப்படுத்த வேண்டியன்றோ
ஓராயோ நெஞ்சே உருகாயோ உற்றிருந்து
பாராயோ அவ்வுருவைப் பார்க்கநிறை வாய்விடுமே.

வாயாதோ இன்பவெள்ளம் வந்துன் வழியாகப்
பாயாதோ நானும் பயிராய்ப் பிழையேனோ
ஓயாமல் உன்னி உருகுநெஞ்சே அந்நிலைக்கே
தாயான மோனனருள் சந்திக்க வந்திடுமே.

வந்த வரவை மறந்துலகாய் வாழ்ந்துகன்ம
பந்தமுற உன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்

பூராயமாக அருட் பூரணத்தில் அண்டமுதல்
பாராதி வைத்த பதியே பராபரமே. ௨

வாழாத வாழ்வுடனே வந்தடைந்தோர் எல்லாரும்
ஆழாழி என்ன அருளானார் அழுக்காற்றே
டேழா யெனவுலகம் ஏசுமினி நானொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே. ௩

உள்ளத்தி னுள்ளே ஒளித்தென்னை ஆட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ
வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே. ௪

வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டுதுவண்
டாவிக்குள் நின்றவரைக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்
பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போர் போலஒன்றைப்
பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே. ௫

விண்ணாறு வெற்பின் விழுந்தாங் கெனமார்பில்
கண்ணாறு பாய்ச்சிடுமென் காதல்வெள்ளங் கண்டிலையோ
தண்ணாறு சாந்தபதத் தற்பரமே நால்வேதப்
பண்ணாறும் இன்பப் பதியே பராபரமே. ௬

கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்குமென
வாடியஎன் னெஞ்சம்முக வாட்டமும்நீ கண்டிலையோ
தேடியநின் சீருனைத் திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடியநான் கண்டாய் பதியே பராபரமே. ௭

நெஞ்சத்தி னூடே நினைவாய் நினைவூடும்
அஞ்சலென வாழுமென தாவித் துணைநீயே
சஞ்சலமாற் றினை இனிமேல் தாய்க்குபசா ரம்புகன்று
பஞ்சரிக்க நானார் பதியே பராபரமே. ௮

புத்திநெறி யாகவுனைப் போற்றிப் பலநாளும்
முத்திநெறி வேண்டாத மூடனென் ஆகெடுவேன்
சித்திநெறிக் கொண்டடையேன் சீரடியார்க் கேவல்செயும்
பத்திநெறிக் கேனுமுகம் பார்நீ பராபரமே. ௯

கண்டறியேன் கேட்டறியேன் காட்டுமினை யேஇதயங்
கொண்டறியேன் முத்தி குறிக்குந் தரமுமுண்டோ
தொண்டறியாப் பேதைமையேன் சொல்லேநின் தொன்மையெலாம்
பண்டறிவாய் நீயே பகராய் பராபரமே. ௧௦

---

## ௫௪. தன்னை

தன்னை அறியத் தனதருளால் தானுணர்த்தும்
மன்னைப் பொருளெனவே வாழாமற் பாழ்நெஞ்சே
பொன்னைப் புவியைமடப் பூவையரை மெய்யெனவே
என்னைக் கவர்ந்திழுத்திட் டென்னபலன் கண்டாயே. ௧

---

## ௫௫. ஆக்குவை

ஆக்குவை மாயை யாவும் நொடியினில் அவற்றை மாள
நீக்குவை நீக்க மில்லா நினைப்பொடு மறப்பு மாற்றிப்
போக்கொடு வரவு மின்றிப் புனிதனா யருளா னந்தந்
தாக்கவுஞ் செய்வா யன்றோ சச்சிதா னந்த வாழ்வே. ௧

---

## ௫௬. கற்புறு சிந்தை

கற்புறு சிந்தை மாதர் கணவரை அன்றி வேறோர்
இற்புறத் தவரை நாடார் யாங்களும் இன்ப வாழ்வுந்
தற்பொறி யாக நல்குந் தலைவநின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணா னந்த வாழ்வே. ௧

முருந்திள நகையார் பார முலைமுகந் தழுவிச் செவ்வாய்
விருந்தமிர் தெனவ ருந்தி வெறியாட்டுக் காளாய் நாளும்
இருந்தலோ காய தப்பேர் இனத்தனாய் இருந்த ஏழை
பொருந்தவுங் கதிமே லுண்டோ பூரணா னந்த வாழ்வே. ௨

நீதலாம் ஒன்றும் இன்மை செறிந்திருட் படலம் போர்த்த
பாதகச் சிந்தை பெற்ற பதகனுன் பாத நீழல்
ஆதர வடைய உன்றன் அருள்கிலை யாயின் மற்றியார்
போதனை செய்ய வல்லார் பூரணா னந்த வாழ்வே. ௩

நாதனே நாதா நீதி நண்பனே நடுவாய் நின்ற
நீதனைக் கலந்து நிற்க நெஞ்சமே நீவா என்றால்
வாதனை பெருக்கி என்னை வசஞ்செய்து மனந்தான் மார்க்க
போதனை செய்தல் நன்றோ பூரணா னந்த வாழ்வே. ௪

எண்ணரிய எண்ண மெல்லாம் இறப்புமேற் பிறப்புக் காசை
பண்ணினன் றறிவையெல்லாம் பாழாக்கி எனைப்பா ழாக்குந்
இன்னிய வினையைக் கொன்று சிறியனை உய்யக்கொண்டால்
புண்ணியம் உனக்கே யன்றோ பூரணா னந்த வாழ்வே. ௫

பத்திநீ பத்திக் கான பலனுநீ பலவாச் சொல்லுஞ்
சித்திநீ சித்தர் சித்தித் திறமுநீ திறமார் மோன
முத்திநீ முத்திக் கான முதலுநீ முதன்மை யான
புத்திநீ எனச்சொன் னன்றோ பூரணா னந்த வாழ்வே. ௬

தாயினும் இனிய நின்னைச் சரணென அடைந்த நாயேன்
பேயினுங் கடைய னாகிப் பிதற்றுதல் செய்தல் நன்றோ
சீயிடை மெழுகாய்க் கொக்கேன் தெளிவிலேன் வீணே காலம்
போயின தாற்ற இல்லேன் பூரணா னந்த வாழ்வே. ௭

---

## ௩௭. மலைவளர்காதலி

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிர மணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதுருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பால் அம்மைநின் தாளில்
கருத்தொன்றும் உண்டாகுமேல்

நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானஆ னந்தஒளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனும் அகந்தைதீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூ தனன்தங்கையே
வரைரா சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௧

தேட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையி லேநடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே அவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே அடியிலேமேல்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே அலையாமல் அறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற அன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலே யுன்இருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளும் அருள்வையோ
வளமருவு தேவைஅரசே
வரைரா சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௨

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டிஎன்
போதத்தின் நடுவாகி அடியீறும் இல்லாத
போதபூ ரணவெளிக்குள்
ஏதுமற நில்லென் றுபாயமா வைத்துநினை
எல்லாஞ்செய் வல்லசித்தாம்
இன்பவுரு வைத்தந்த அன்னையே நின்னையே
எளியேன் மறந்துய்வனோ

வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்கும்உள் கண்இலார்க்கும்
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
வீறுவா தம்புகலுவாய்
வாதமோ யாவர்க்கும் எட்டாத மூக்கறுடை
மாமருந்துக் கமிர்தமே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௫

மீடியிட்ட வாழ்க்கையால் உப்பிட்ட கலமெனவும்
மெய்யெலாம் உள்ளுடைந்து
வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுறவேதனுந்
தூடியிட்ட வெவ்வினையை யெவிருன் பாவிநான்
தொடரிட்ட தொழில்களெல்லாந்
தூண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன
தொண்டர்பணி செய்வதென்றோ
அடியிட்ட செந்தமிழின் அருமையிட் டாரூரில்
அரிவையோர் பரவைவாயில்
அம்மட்டும் அடியிட்டு நடைநடந் தருளடிகள்
அடியீது முடியீதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவைஅரசே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௬

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகிஎழில்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள
புஷ்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்திஎன்றுன்
நாமமே உச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்ச ரிக்கவசமோ

ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ
அகிலாண்ட கோடிஈன்ற
அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே
வாரணியும் இருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவைஅரசே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௩

பாகமோ பெறஉனைப் பாடஅறி யேன்மல
பரிபாகம் வரவும்மனதில்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
சிந்தியேன் பேரின்பமோ
சேரஎன் றாற்கள்ள மனதுமோ மெத்தவுஞ்
சிந்திக்கு தென்செய்குவேன்
மோகமோ மதமோ குரோதமோ லோபமோ
முற்றுமாற் சரியமோதான்
முறியிட் டெனைக்கொள்ளுந் தியமோ தேடஎனின்
மூசுவரி வண்டுபோல
மாசமோ டவ்வல்லன் எனையாள வல்லையோ
வளமருவு தேவைஅரசே
வரைராச னுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௪

தூளேறு மாசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கினாளுஞ்
சுழலேறு காற்றினிடை அழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவைஎல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றின்
நட்பேற உள்ளுடைந்து
நயனங்கள் அற்றதோர் ஊரேறு போலவே
நானிலந் தனில்அலையவோ

வேளேறு தந்தியைக் கணநந்தி யுடன்வென்று
விரையேறு மாலைசூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய்
வானேறு கன்னியே விடையேறும் எம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே
வைராக சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௭

பூசமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுத லானபேய்கள்
போராடு கோபாதி ராட்சசப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மவுனமந் த்ராதிக்ய
வித்தையை வியந்தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானஆ னந்தமயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கும் உணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே
வைராக சனுக்கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காத லிப்பெண்உமையே. ௮

---

## ௩௮. அகிலாண்டநாயகி

வட்ட மிட்டொளிர்பி ராண வாயுவெனு
நிகள மோடுகம னஞ்செயும்
மனமெ னும்பெரிய மத்த யானையைஎன்
வசம டக்கிடின்மும் மண்டலத்
திட்ட முற்றவள ராச யோகமிவன்
யோக மென்றறிஞர் புகழவே
ஏழை யேனுலகில் நீடு வாழ்வன்இனி
இங்கி தற்கும்அனு மானமோ
பட்ட வர்த்தனர் பராவு சக்ர தர
பாக்ய மானசுப யோகமும்
பார காவிய கவித்வ நான்மறை
பராய ணஞ்செய்மதி யூகமும்
அட்ட சித்தியுந லன்ப ருக்கருள
விருது கட்டியபொன் அன்னமே
அண்ட கோடிபுகழ் காவை வாழும்அகி
லாண்ட நாயகியென் அம்மையே. ௧

---

## ௩௯. பெரியநாயகி

காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி
கன்மப் புனற்குளூறுங்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மட்கலக்
காயத்துள் எனையிருத்திச்
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
துருத்திக்குள் மதுவென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேன்அருள்
தோயநீ பாய்ச்சல்செய்து

பற்றைப் பறித்தெனை ஞானமாம் பயிரதனை
நாட்டிப் புலப்பட்டியும்
நமனுனை நீப்பூடும் அணுகாமல் முன்னின்று
நாடுசிவ போகமான
பேற்றைப் பகுத்தருளி யெனையாள வல்லையோ
பெரியஅகி லாண்டகோடி
பெற்றநா யகிபெரிய கபிலைமா நகர்மருவு
பெரியநா யகியம்மையே. ௯

---

## ௪௰. தந்தைதாய்

தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்தும் வெளியருள் தழைத்த போதே
இந்திரசா லங்கனவு கானல் நீராய்
இருந்ததுவே இவ்வியற்கை என்னே என்னே. ௧

என்னைநான் கொடுக்கவொருப் பட்ட காலம்
யாதிருந்தென் எதுபோயென் என்னை நீங்கா
அன்னைபோல் அருள்பொழியுங் கருணை வாரி
ஆனந்தப் பெருமழையே அரசே சொல்லாய். ௨

அரசேநின் திருக்கருணை அல்லா தொன்றும்
அறியாத சிறியேனான் அதனால் முத்திக்
கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டுங்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன். ௩

கண்டேனிங் கென்னையுமென் றனையும் நீங்காக்
கருணையுநின் றன்னையும்நான் கண்டேன் கண்டேன்
விண்டேனென் றனைப்புறம்பாத் தள்ள வேண்டாம்
விண்டதுநின் அருட்களிப்பின் வியப்பா லன்றே. ௪

ஓவென்ற சுத்தவெளி யொன்றேநின் றிங்
குயிரையெல்லாம் வம்மினென உவட்டா இன்பத்

தேவென்று நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ செகவி லாசம். ரு

செகத்தையெல்லாம் அணுவளவஞ் சிதரு வண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பைஅணுத் திரளை எல்லாம்
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா நீநினைத்த வாறே எல்லாம். சு

சொல்லாலே வாய்துடிப்ப தல்லால் நெஞ்சந்
துடித்திருகண் நீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலேய் இருந்தநெஞ்சங் கல்லால் முக்கட்
கனியேயெக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ. எ

---

## சக. பெற்றவட்கே

பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
பெறாப்பேதை யறிவாளோ பேரா னந்தம்
உற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண் டாகும்
உறாதவரே கல்நெஞ்ச முடைய ராவார். க

ஆவாவென் றழுதுதொழுங் கைய ராகி
அப்பனே ஆனந்த அடிக ளேநீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை எந்தாய்
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே. உ

நீயேஇங் கெளியேற்குந் தாக மோக
நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்த லாலே
பேயேற்குந் தனக்கெனவோர் அன்பு முண்டோ
பெம்மானே இன்னமன்பு பெருகப் பாராய். ௩

பாராயோ என்துயரம் எல்லாம் ஐயா
பகருமுன்னே தெரியாதோ பாவி யேன்முன்
வாராயோ இன்னமொரு காலானாலும்
மலர்க்காலென் சென்னிமிசை வைத்தி டாயோ. ச

வைத்திருந்த காலைப்பிடித்துக் கண்ணில் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டுகையால் வளைத்துக் கட்டிச்
சித்தமிசைப் புகஇருத்திப் பிடித்துக் கொண்டு
தியக்கமற இன்பசுகஞ் சேர்வ தென்றோ. ரு

சேராமற் சிற்றினத்தைப் பிரித்தெந் நாளும்
திருவடிப்பே றினைத்துடனே சேரா வண்ணம்
ஆராக நான்அலைந்தேன் அரசே நீதான்
அறிந்திருந்தும் மாயைப்பேய் அழுந்த வைத்தாய். சு

வைத்தபொருள் உடலாவி மூன்றுஞ் சின்மய
வசமெனவே யான்கொடுக்க வாங்கிக் கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ பொய்யோ
தெரியேற்கிங் குளவுரையாய் திகையா வண்ணம். எ

திகையாதோ எந்நாளும் பேரா னந்தத்
தெள்ளமுதம் உதவாமல் திவலை காட்டி
வகையாக அலக்கழித்தாய் உண்டு டுத்து
வாழ்ந்தேன்நான் இரண்டுகால் மாடு போலே. அ

மாடு மக்கள் சிற்றிடையார் செம்பொன் ஆடை
வைத்தகன தனமேடை மாட கூடம்
வீடுமென்பால் தொடர்ச்சியோ இடைவி டாமல்
முக்கதி வீடன்றோ விளங்கல் வேண்டும். கூ

விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற
வேதகமே போதகமே விமல வாழ்வே
களங்கரகி தப்பொருளே யென்னை நீங்காக்
கண்ணுதலே நாதாந்தக் காட்சிப் பேறே. க0

நாதமே நாதாந்த வெளியே சுத்த
ஞாதுருவே ஞானமே ஞேய மேநல்
வேதமே வேதமுடி வான மோன
வித்தையிங் கென்னையினி விட்டி டாதே. கக

---

## ௪௨. கல்லாலின்

கல்லாலின் நீழல்தனில் ஒருநால் வர்க்குங்
கடவுள்நீ உணர்த்துவதுங் கைகாட் டென்றால்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை
துரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபே யன்றோ. ௧

அன்றேஆ மோஎனவுஞ் சமய கோடி
அத்தனையும் வெவ்வேறாய் அரற்ற நேரே
நின்றாயே நினைப்பெறுமா றெவ்வா றிங்கே
நின்னருள்கொண் டறிவதல்லால் நெறிவே றுண்டோ. ௨

நெறிபார்க்கில் நின்னையன்றி அகிலம் வேறோ
நிலநீர்தீக் கால்வானும் நீய லாத
குறியாறும் இல்லையென்றால் யாங்கள் வேறோ
கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய். ௩

கூறாய ஐம்பூதச் சுமையைத் தாங்கிக்
குணமிலா மனமெனும்பேய்க் குரங்கின் பின்னே
மாறாத கவலையுடன் சுழல என்னை
வைத்தனையே பரமேநின் மகிமை நன்றே. ௪

நன்றெனவுந் தீதெனவும் எனக்கிங் குண்டோ
நானாகி நீயிருந்த நியாயஞ் சற்றே
இன்றெனக்கு வெளியானால் எல்லாம் வல்ல
இறைவாநின் அடியருடன் இருந்து வாழ்வேன். ௫

வாழ்வெனவுந் தாழ்வெனவும் இரண்டாப் பேசும்
வையகத்தார் கற்பனையாம் மயக்க மான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
பரமேநின் ஆனந்தப் பார்வை யெங்கே. ௬

எங்கேயெங் கேஅருளென் றெமையி ரந்தான்
ஏழையிவன் எனவுமெண்ணி யிச்சை கூறும்

அங்கேயங் கேயெளிவந் தென்னை ஆண்ட
ஆரமுதே உனைக்காண்பான் அலந்து போனேன். எ

போனநாட் கிரங்குவதே தொழிலா இங்ஙன்
பொருந்துநாள் அத்தனையும் போக்கி னேனென்
ஞானநா யகனேநின் மோன ஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கும் நாளெந் நாளோ. அ

நாள்பட்ட கமலமென்ன இதயம் மேவும்
நறுந்தேனே துன்மார்க்க நாரி மார்கண்
வாள்பட்ட காயமிந்தக் காய மென்றே
வன்கூற்றும் உயிர்பிடிக்க வருமந் நீதி. ௯

நீதியெங்கே மறையெங்கே மனுவின் எங்கே
நித்தியமாம் அவர்விளக்கே நெறிதப் பாது
சாதியெங்கே ஒழுக்கமெங்கே யாங்க ளெங்கே
தற்பரநீ பின்னுமொன்றைச் சமைப்ப தானால். க0

ஆனாலும் யானெனதிங் கற்ற எல்லை
அதுபோதும் அதுகதிதான் அல்ல வென்று
போனாலும் யான்போவன் அல்லால் மோனப்
புண்ணியனே வேறுமொரு பொருளை நாடேன். கக

பொருளெனின்நின் பூரணமே விட்ட காலம்
போக்குவர வுண்டோதற் போத முண்டோ
இருள்தானுண் டோஅல்லால் வெளிதான் உண்டோ
இன்பமுண்டோ துன்பமுண்டோ யாமங் குண்டோ. க௨

உண்டோநீ படைத்தவுயிர்த் திரளில் என்போல்
ஒருபாவி தேகாதி உலகம் பொய்யாக்
கண்டேயும் என்னளவுந் துறவு மின்றிக்
காசினிக்குள் அலைந்தவரார் காட்டாய் தேவே. க௩

தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாள் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்று மோதான். க௪

முற்றுமோ எனக்கினியா னந்த வாழ்வு
மூதறிவுக் கினியாய்நின் முளரித் தாளில்
பற்றுமோ சற்றுமில்லை ஐயோ ஐயோ
பாவிபடுங் கட்கலக்கம் பார்த்தி லாயோ. கரு

பார்த்தனவெல் லாமழியும் அதனாற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே மோன
மூர்த்திவடி வாயுணர்த்துங் கைகாட் டுண்மை
முற்றியவென தல்லல்வினை முடிவ தென்றோ. கசா

என்றனைநீ அன்றனம்யாம் என்ப தென்னை
இதுநிற்க எல்லாந்தாம் இல்லை யென்றே
பொன்றிடச்செய் வல்லவனீ யெமைப்ப டைக்கும்
பொற்புடையாய் என்னின்அது பொருந்தி டாதே. கஎ

பொருந்துசகம் அனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போத ரூபத்
திருந்தபடி யென்றிருப்ப தன்றே யன்றோ
எம்பெருமான் யான்கவலை யெய்தாக் காலம். கஅ

காலமே காலமொரு மூன்றுங் காட்டுங்
காரணமே காரணகா ரியங்கள் இல்லாக்
கோலமே எனைவாவா என்று கூவிக்
குறைவறநின் அருள்கொடுத்தாற் குறைவோ சொல்லாய்.

சொல்லாய தொகுதியெல்லாங் கடந்து நின்ற
சொரூபானந் தச்சுடரே தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலும் மெத்த நன்றே
கரணமுடன் நான்உறவு கலக்க மாட்டேன். உ0

கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்
கடவுளுனைக் காணவே காய மாதி
புலம்காணார் நானொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய். உக

கண்டிலையோ யான்படும்பா டெல்லாம் மூன்று
கண்ணிருந்துந் தெரியாதோ கசிந்துள் ளன்பார்

இரக்கமொடு பொறைஈதல் அறிவா சாரம்
இல்லேன்நான் நல்லோர்கள் ஈட்டங் கண்டால்
காக்குமியல் புடையேன்பாழ் நெஞ்சம் எந்தாய்
கருந்தாதோ வல்லுருக்கோ கரிய கல்லோ. ௩0

---

## ௪௩. பராபரக்கண்ணி

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமமுதல்
பாராதி யாண்ட பதியே பராபரமே. க

கண்ணாரக் கண்டோர் கருப்பொருள்கா ணாமலருள்
விண்ணா டிருந்தஇன்ப வெற்பே பராபரமே. உ

சிந்தித்த எல்லாமென் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே பராபரமே. ௩

ஆரா அமுதே அரசேஆ னந்தவெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே. ௪

ஆரறிவார் என்ன அனந்தமறை ஓலமிடும்
பேரறிவே இன்பப் பெருக்கே பராபரமே. ௫

உரையிறந்த அன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த இன்பக் கடலே பராபரமே. ௬

எத்திக்குந் தானாகி என்னிதயத் தேயூறித்
தித்திக்கும் ஆனந்தத் தேனே பராபரமே. ௭

திக்கொடுகீழ் மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே பராபரமே. ௮

முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தேஎன் னுள்ளத் தெளிவே பராபரமே. ௯

கண்ணே கருத்தேயென் கற்பகமே கண்ணிறைந்த
விண்ணே ஆனந்த வியப்பே பராபரமே. க0

வாக்கால் மனதால் மனவாக் கிறந்தவர்பால்
தாக்காதே தாக்குந் தனியே பராபரமே. ௧௧

பார்த்தவிட மெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தை சொல்லவந்த குருவே பராபரமே. ௧௨

வானந்த மண்ணினர்தம் வைப்பைவைத் துப் பார்க்கவெனக்
கானந்தந் தந்த அரசே பராபரமே. ௧௩

அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே. ௧௪

வானமென் வாங்கொண்ட மன்னுமணிப் பெட்டகத்துக்
கானபணி யான அணியே பராபரமே. ௧௫

ஒன்றும் இருதிறமும் ஒன்றாகக் கண்டவர்கள்
நாடும் பொருளான நட்பே பராபரமே. ௧௬

சித்த நினைவுஞ் செயுஞ்செயலும் நீயெனவாழ்
உத்தமர்கட் கான உறவே பராபரமே. ௧௭

போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனும்
வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே. ௧௮

முத்தாந்த வீதி முளரிதொழும் அன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே. ௧௯

ஈனர் தருமுடலம் என்னதியான் என்பதற
ஆனந்தம் வேண்டி அலந்தேன் பராபரமே. ௨௦

என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்துகரைந்
தன்புருவாய் நிற்க அலந்தேன் பராபரமே. ௨௧

சுத்த அறிவாய்ச் சுகம்பொருந்தின் அல்லாலென்
சித்தந் தெளியாதென் செய்வேன் பராபரமே. ௨௨

மாறா அநுபூதி வாய்க்கின் அல்லால் என்மயக்கந்
தேறாதென் செய்வேன் சிவமே பராபரமே. ௨௩

தாமமறிந் தின்பநிட்டை தாராயேல் ஆகெடுவேன்
தேகம் விழுந்திடினென் செய்வேன் பராபரமே. ௨௪

அப்பாஎன் எய்ப்பில் வைப்பே ஆற்றகிலேன் போற்றிஎன்று
செப்புவதல் லால்வேறென் செய்வேன் பராபரமே. ௨௫

உற்றறியும் என்னறிவும் உட்கருவி போற்சவிமாண்
டற்றுமின்பந் தந்திலையே ஐயா பராபரமே. ௨௬

சொல்லால் அடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லால்என் தாகம் அறுமோ பராபரமே. ௨௭

பாராயோ என்னைமுகம் பார்த்தொருகால் என்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே. ௨௮

ஓயாதோ என்கவலை உன்னோடா னந்தவெள்ளம்
பாயாதோ ஐயா பகராய் பராபரமே. ௨௯

ஏகோ உனைப்பிரிந்தார் உள்ளந் தனலில்வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே. ௩௦

கூர்த்தஅறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளைப்
பார்த்தவன்நான் என்னைமுகம் பாராய் பராபரமே. ௩௧

கடலமுதே தேனேயென் கண்ணே கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே. ௩௨

உள்ள மறிவாய் உழப்பறிவாய் நான்ஏழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே. ௩௩

கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலஎனக்
கென்றிரங்கு வாய்கருணை எந்தாய் பராபரமே. ௩௪

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிஎண்ணி ஏழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே. ௩௫

ஆழித் துரும்பெனவே அங்குமிங்கும் உன்னடிமை
பாழில் திரிவதென்ன பாவம் பராபரமே. ௩௬

கற்றஅறி வால்உனைநான் கண்டவன்போற் கூத்தாடில்
குற்றமென்றென் னெஞ்சே கொதிக்கும் பராபரமே. ௩௭

ஐயோ உனைக்காண்பான் ஆசைகொண்ட தத்தனையும்
பொய்யோ வெளியாய்ப் புகலாய் பராபரமே. ௩௮

துன்பக்கண் ணீரில் துளைந்தேற்குன் ஆனந்த
இன்பக்கண் ணீர்வருவ தெந்நாள் பராபரமே. ௩௯

வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றாயுழலும்
நெஞ்சனுக்கும் உண்டோ நெறிதான் பராபரமே. ௪0

பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி யாவுறும்
மோசம்போ னேனென்னான் முறையோ பராபரமே. ௪௧

நன்றறியேன் தீதறியேன் நானென்று நின்றவனை
என்றறியேன் நாள்கழிவு என்னே பராபரமே. ௪௨

இன்று புதிதன்றே எளியேன் படுந்துயரம்
ஒன்றும் அறியாயோ உரையாய் பராபரமே. ௪௩

எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டசவம்
அத்தனையும் நீயறிந்த தன்றோ பராபரமே. ௪௪

இந்நாட் சற்றும் இரக்கமிலையேற் காலன்வரும்
அந்நாட் காக்கவல்லார் ஆர்காண் பராபரமே. ௪௫

உற்றுற்று நாடி உளம்மருண்ட பாவியைநீ
சற்றிரங்கி ஆளத் தகாதோ பராபரமே. ௪௬

எள்ளளவும் நின்னைவிட இல்லா எனைமயக்கில்
தள்ளுதலால் என்னபலன் சாற்றாய் பராபரமே. ௪௭

பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடி யெனையடிமை சேர்த்தாய் பராபரமே. ௪௮

சொன்னதைச் சொல்வதல்லாற் செய்யறியேன் சொல்லிறந்த
சொன்னதைச் செய்வேன் எளியேன் பராபரமே. ௪௯

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா இருப்பதற்கே
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே. ௫0

நேச நிருவிகற்ப நிட்டையல்லால் உன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றே பராபரமே. ௫௧

துச்சனென வேண்டாம்நீ தொக்க [illegible] கண்டால்
அச்சம் மிகவுடையேன் ஐயா பராபரமே. ௫௨

கண்ணாவா ரேனுமுனைக் கைகுவியா ராயின்அந்த
மண்ணாவார் நட்பை மதியேன் பராபரமே. ௫௩

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் இச்சை பராபரமே. ௫௪

எத்தாற் பிழைப்பேனோ எந்தையே நின்னருட்கே
பித்தானேன் மெத்தநான் பேதை பராபரமே. ௫௫

வாயினாற் பேசா மவுனத்தை வைத்திருந்துந்
தாயிலார் போல்நான் தளர்ந்தேன் பராபரமே. ௫௬

அன்னையிலாச் சேய்போல் அலக்கணுற்றேன் கண்ணார
என்னகத்தில் தாய்போல் இருக்கும் பராபரமே. ௫௭

உற்றவினைக் கில்துயரம் உன்றுதெள்ளோ செத்தியாய்ப்
பற்றறொங்கேதன் என்னைமுகம் பார்நீ பராபரமே. ௫௮

பொய்யன் இவன் என்றுமெள்ளப் போதிப்பார் சொற்கேட்டுக்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே பராபரமே. ௫௯

எண்ண மறிந்தே இளைப்பறிந்தே எழைஉய்யும்
வண்ணந் திருக்கருணை வையாய் பராபரமே. ௬0

நாட்டாதே யென்னையொன்றில் நாட்டி யிதமகிதங்
காட்டாதே யெல்லாம்நீ கண்டாய் பராபரமே. ௬௧

உன்னைநினைந் துன்நிறைவில் உள்ளே உலாவும்என்னை
அன்னைவயிற் றின்னம்அடைக் காதே பராபரமே. ௬௨

பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாறா
வரமெனக்குத் தந்தருள்என் வாழ்வே பராபரமே. ௬௩

வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்
சிந்திக்க நின்னதருள் செய்யாய் பராபரமே. ௬௪

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே. ௬௫

வெட்டவெளிப் பேதையன்யான் வேறுகப டொன்றறியேன்
சிட்டருடன் சேர்அனந்த தெண்டன் பராபரமே. ௬௬

எத்தனையோ நேர்ந்தாலும் என்னுளே இன்பமுண்டோ
சித்துருவே இன்பச் சிவமே பராபரமே. அக

மண்ணொடுவிண் காட்டி மறைந்துமறை யாஅருளைக்
கண்ணொடுகண் ணாகஎன்று காண்பேன் பராபரமே. அஉ

பஞ்சரித்து நின்னைப் பலகால் நிரந்ததெல்லாம்
அஞ்சலெனும் பொருட்டே அன்றோ பராபரமே. அங

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வவராய்
அங்கங் கிருப்பதுநீ அன்றோ பராபரமே. அச

அனைத்துமாய் நின்றாயே யான்வேறோ நின்னை
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் பராபரமே. அரு

நின்போதத் தாலே நினைப்பு மறப்புமென்றால்
என்போதம் எங்கே இயம்பாய் பராபரமே. அசா

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமனம் எல்லாம்நீ
என்றறிந்தால் எங்கே இருக்கும் பராபரமே. அஎ

கோயத்தில் வயிரமெனக் கோதறவுன் அன்பில்
அழுந் தியவர்க் கேசுகமுண் டாகும் பராபரமே. அஅ

பற்றும் பயிர்க்குப் படர்கொழுக்கொம் பேபோற் பருவம்
பெற்றவர்க்கே நின்னருள்தான் பேறாம் பராபரமே. அகூ

போகியர்க்கே ஞானம் பொருந்தாமே யென்பாலே
நாகியரும் யோகம்முன்னே சார்ந்தோர் பராபரமே. கூ0

அல்லும் பகலும் அறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமையான பராபரமே. கூக

எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க் குனைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ பராபரமே. கூஉ

அந்தக் கரணம் அடங்கத் துறப்பதுவே
எந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே. கூங

தன்னை அறிந்தால் தலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றும்உண்டோ பேசாய் பராபரமே. கூச

அன்பாற் கரைந்துகண்ணீர் ஆறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவுதான் உண்டோ பராபரமே. ௯௫

தன்னை அறிந்தருளே தாரகமா நிற்பதுவே
உன்னை அறிதற் குபாயம் பராபரமே. ௯௬

கற்றநிலை யல்லநிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றவிடத் தேவெளியாம் அன்றோ பராபரமே. ௯௭

கண்ணுமைக் கண்விழித்துக் காண்பதுண்டோ நின்னருளாம்
விண்ணுமுதல் எல்லாம் வெளியாம் பராபரமே. ௯௮

நேரே நினதருளென் னெஞ்சைக் கவரின்ஒன்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே. ௯௯

வான்காண வேண்டுமென மல்வேறு வொக்கும்உன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே. ௱

வாதனைவிட் டுன்னருளில் மன்னினல்லால் வேறுமொரு
சாதனைதான் உண்டோநீ சாற்றாய் பராபரமே. ௱௧

பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருள்
தாரகத்தைப் பற்றியன்றோ சாற்றாய் பராபரமே. ௱௨

விளக்குந் தகளியையும் வேறென்றார் தன்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே. ௱௩

பாராதி நீயாப் பகர்ந்தால் அகமெனவும்
ஆராயுஞ் சீவனுஞ் யாங்காண் பராபரமே. ௱௪

பொய்யைப்பொய் யென்றறியும் போதத்துக் காதரவுன்
மெய்யருளே அன்றோ விளம்பாய் பராபரமே. ௱௫

வருவான்பேர் தேன்எனல்போல் மன்னியழி யுஞ்சகத்தைத்
தெரிவாக இல்லையென்ற தீரம் பராபரமே. ௱௬

மாயா சகமிலையேல் மற்றெனக்கோர் பற்றுமிலை
நீயோநான் என்றுவந்து நிற்பேன் பராபரமே. ௱௭

வானாதி நீயெனவே வைத்தமறை என்னையும்நீ
தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே. ௱௮

வெள்ளக் கருணைமத வேழமாம் நின்னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம் பராபரமே. ௧௦௯

வண்டாய்த் துவண்டு மவுன மலரணைமேல்
கொண்டார்க்கோ இன்பங் கொடுப்பாய் பராபரமே. ௧௧௦

மாயைமுத லாம்வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்தேர்ந்
தாயும்அறி வானதுநீ அன்றோ பராபரமே. ௧௧௧

என்னறிவும் யானும்என தென்பதுவு மாம்இவைகள்
நின்னவையே அன்றோ நிகழ்த்தாய் பராபரமே. ௧௧௨

பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
யாரறிவார் நானோ அறிவேன் பராபரமே. ௧௧௩

அண்டம் அனைத்திலுமாய் அப்பாலுக் கப்பாலுங்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே. ௧௧௪

ஒப்புயர்வொன் றின்றி ஒலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருள்நீ கண்டாய் பராபரமே. ௧௧௫

என்போல் எளியவரும் எங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரும் உண்டோ பராபரமே. ௧௧௬

பார்க்கின் அண்டபிண்டப் பரப்பனைத்தும் நின்செயலே
யார்க்குஞ் செயலிலையே ஐயா பராபரமே. ௧௧௭

ஒன்றே பலவே உருவே அருவேயோ
என்றே அழைப்பதுன்னை என்றோ பராபரமே. ௧௧௮

செப்புவதெல் லாஞ்செபம்நான் சிந்திப்ப தெல்லாம்நின்
ஒப்பில் தியானமென ஓர்ந்தேன் பராபரமே. ௧௧௯

ஆரிருந்தென் ஆர்போய்என் ஆரமுதாம் நின்னருளின்
சீரிருந்தால் உய்வேன் சிவமே பராபரமே. ௧௨௦

வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சி உனையடைந்தேன் ஐயா பராபரமே. ௧௨௧

எந்தப் படியுன் இதயம் இருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ பராபரமே. ௧௨௨

எந்தெந்த நாளும் எனைப்பிரியா தென்னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டஅருள் தேவே பராபரமே. ௧௨௩

அஞ்சல்அஞ்சல் என்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சில் உணர்த்தும் நிறைவே பராபரமே. ௧௨௪

என்னையுன்றன் கைக்களித்தார் யாவரென்னை யான்கொடுத்தாற்
பின்னையுன்றுற பெற்றாலும் பேசேன் பராபரமே. ௧௨௫

வாய்பேசா ஊமையென வைக்கவென்றோ நின்மவுனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே. ௧௨௬

தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண் டென்னபலன் எந்தாய் பராபரமே. ௧௨௭

மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கின்அன் பர்க்கென்ன பயங்காண் பராபரமே. ௧௨௮

கட்டியுனை யாமல் நாயங்கிலே யாய்வெளியில்
விட்டவென்னை யானோ வியப்பேன் பராபரமே. ௧௨௯

ஏதொன்று மின்றியென்னைச் சும்மா இருக்கவைத்தாய்
ஏதொன்றும் போதாதோ இன்பம் பராபரமே. ௧௩௦

வாயொன்றும் பேசா மவுனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ இன்பம் பராபரமே. ௧௩௧

என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த
தொன்றும்போ தாதோ உரையாய் பராபரமே. ௧௩௨

எண்டிசைக்கும் மேலான எல்லாம் பெருவெளியாக்
கண்டவிடத் தென்னையும்நான் கண்டேன் பராபரமே. ௧௩௩

பித்தனையே தம்மறியாப் பேதையனை ஆண்டவனை
எத்தனைதான் கொண்டா டிடுவேன் பராபரமே. ௧௩௪

தாயர்கர்ப்பத் தடையாமுந் தண்ணீருந் தந்தருளும்
நேயவனை யாரே நினையார் பராபரமே. ௧௩௫

விரிந்த மனமொடுங்கும் வேளையில் நானகப்
பார்ந்த அருள்வாழி பதியே பராபரமே. ௧௩௬

நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்அன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே. கருக

கேட்டவழி ஆணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப்பூசை செய்வார் பராபரமே. கருஉ

காற்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பில் தேகம் விழுமோ பராபரமே. கருங

பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே. கருச

அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே. கருரு

மூர்த்திதலந் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே. கருசு

விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே. கருஎ

தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ
ஞானந் தலைப்படிய நல்லோர் பராபரமே. கருஅ

சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற ஆணவப்பேய்க்
கின்னல் வருவதெந்நாள் எந்தாய் பராபரமே. கருகூ

இன்றோ இருவினைவந் தேறியதோ நானென்றோ
அன்றே விளைந்ததன்றோ ஆற்றேன் பராபரமே. கசு0

என்னமுந்நான் நின்னைவிட இல்லையென்றால் யான்முனமே
பன்னவினை யேது பகராய் பராபரமே. கசுக

என்னைஇன்ன தென்றறியா ஏழைக்கும் ஆமெனவேன்
முன்னைவினை கூடல் முறையோ பராபரமே. கசுஉ

அறியாநான் செய்வினையை ஐயாநீ கூட்டுங்
குறியேதெனக்குளவு கூறாய் பராபரமே. கசுங

என்னைக் கெடுக்க இசைந்த இருவினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ பராபரமே. கசுச

இல்லாத காரியத்தை இச்சித்துச் சிந்தைவழிச்
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே. ககூங

ஏதுவந் தாலுமெத் தொழிற்றாலும் என்னதுயர் என்னார்கள்
போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே. ககூச

ஆயிரஞ் சொன்னாலும் அறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே. ககூரு

மாய மயக்கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேய அருள்நிலையில் நிற்பார் பராபரமே. ககூசு

நீத்திரையிற் செந்தபிணம் நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே. ககூஎ

என்னெஞ்ச மேனுந் திரங்குமே நின்னருட்குக்
கன்னெஞ் சுருகுமோ காட்டாய் பராபரமே. ககூஅ

மந்தஅறி வாகியின்பம் வாயா திருந்தலைந்தால்
சிந்தைமயங் காதோஎன் செய்வேன் பராபரமே. ககூகூ

தேடினேன் திக்கினைத்துந் தெண்டனிட்டேன் சிந்தைநைந்து
வாடினேன் என்மயக்கம் மாற்றாய் பராபரமே. உOO

மடிமையெனும் ஒன்றை மறந்தன்றோ என்னை
அடிமைகொள வேண்டும் அரசே பராபரமே. உOக

காலர்பயந் தீரநின்பங் காற்கபய மென்றெழுந்த
பாலை வளர்த்தனையே வாழி பராபரமே. உOஉ

நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்பதல்லால் வேறொன்றைப் பாரேன் பராபரமே.

நீர்க்குமிழி போலென் நினைவுவெளி யாக்கரையப்
பார்க்குமிடம் எல்லாம்என் பார்வை பராபரமே. உOச

ஆடிஓய் பம்பரம்போல் ஆசையுடன் எங்கும்உனைத்
தேடிஓய் கின்றேன்என் செய்வேன் பராபரமே. உOரு

வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கும்
நாதாந்த மோன நலமே பராபரமே. உOசு

எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே. ௨௨௧

முன்னோர்மெய்ஞ் ஞான முனிவர்தவம் ஈட்டுதல்போல்
இந்நாளிற் காணவெனக் கிச்சை பராபரமே. ௨௨௨

கன்மமென்ப தெல்லாங் கரிசறவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை பராபரமே. ௨௨௩

கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற
மண்டிய பேரொளிநீ வாழி பராபரமே. ௨௨௪

நானென தன்மையென்ப தோடாமல் ஓடஇன்ப
வானாகி நின்றனைநீ வாழி பராபரமே. ௨௨௫

அகண்டா காரமுமாய் அண்டமெல்லாந் தானாய்
மகத்தாகி நின்றனைநீ வாழி பராபரமே. ௨௨௬

காரணமாங் கர்ப்பமுறைக் கண்ணூடும் என்கண்ணே
ஓரம்வைத்துக் காத்தனைநீ வாழி பராபரமே. ௨௨௭

போந்தோர்தந் தேசமென்பார் பூமியைப் போராடி
இறந்தோருந் தம்மதென்பார் என்னே பராபரமே. ௨௨௮

பூர்த்தியெல்லாம் வாழியெங்கள் மோனகுரு வாழிஅருள்
வார்த்தையென்றும் வாழிஅன்பர் வாழி பராபரமே. ௨௨௯

சொல்லும் பொருளுந் தொடரா அருள்நிறைவில்
செல்லும் படிக்கருள்நீ செய்தாய் பராபரமே. ௨௩௦

இற்றைவரைக் குள்ளாக எண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்கள் எத்தனைபேர் பேசாய் பராபரமே. ௨௩௧

நாடும் நகரும்நிசா னிட்டிய பாளயமும்
ஈடுசெயு மோமுடிவில் என்தாய் பராபரமே. ௨௩௨

தேடுந் திரவியமுஞ் சேர்ந்தமணிப் பெட்டகமுங்
கூட வருந்துணையோ கூறாய் பராபரமே. ௨௩௩

தேடாத தேட்டினரே செங்கைத் துலாக்கோல்போல்
வாடாச் சமனிலையில் வாழ்வார் பராபரமே. ௨௩௪

சிற்பரமே தற்பரமே தெய்வச் சுருதிசொன்ன
அற்புதமே அன்பே அறிவே பராபரமே. ௨௪௯

அறிவிப்பான் நீயென்றால் ஐம்புலங்க டந்தந்
நெறிநிற்பார் யாரே நிகழ்த்தாய் பராபரமே. ௨௫0

அந்தக் கரணமெனும் ஆகாத பேய்கள்எனை
வந்துபிடித் தாட்ட வழக்கோ பராபரமே. ௨௫௧

ஐவரொடுங் கூடாமல் அந்தரங்க சேவைதந்த
தெய்வ அறிவே சிவமே பராபரமே. ௨௫௨

அருளாகி நின்றசுகம் ஆகாமல் ஐயோ
இருளாகி நிற்க இயல்போ பராபரமே. ௨௫௩

அன்பரெல்லாம் இன்பம் அருந்திடவும் யான்ஒருவன்
துன்புறுதல் நன்றோநீ சொல்லாய் பராபரமே. ௨௫௪

சாந்தமும் நின்கருணை சாற்றுவதல் லால்வேறு
சிந்தைஅறி யேன்உன் சித்தம் பராபரமே. ௨௫௫

நான்நான் எனக்குளறும் நாட்டத்தால் என்னைவிட்டுப்
போனாலும் உன்னைவிட்டுப் போகேன் பராபரமே. ௨௫௬

இக்காயம் பொய்யென்றோர் எட்டத் துணைக்கபயம்
புக்காதார் உண்டோ புகலாய் பராபரமே. ௨௫௭

தானாதல் பூரணமே சாருமிடம் உண்டுயிரும்
வானாதியும் ஒழுங்காய் மன்னும் பராபரமே. ௨௫௮

உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னும்ஆ னந்தவி ளக்கே பராபரமே. ௨௫௯

நாட்பட் டலைந்த நடுக்கமெலாந் தீரவுனக்
காட்பட்டுந் துன்பம்எனக் காமோ பராபரமே. ௨௬0

பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங் காதிருந்தால்
ஆவிக் குறுதுணையார் ஐயா பராபரமே. ௨௬௧

நின்னிறைவே தாரகமாய் நின்றசுகம் எய்தாமல்
என்னிறைவே பாவித்தேன் என்னே பராபரமே. ௨௬௨

நின்னைச் சரண்புகுந்தால் நீநோக்கல் வேண்டுமல்லால்
என்னைப் புறம்விடுதல் என்னே பராபரமே. ௨௬௩

மாறாத துன்பமெல்லாம் வந்தடைந்தால் நின்செவியில்
ஏறாத வாறே தியம்பாய் பராபரமே. ௨௬௪

விஞ்சுபுலப் பாடனைத்தும் வீணாத் துன்பஞ் செய்யவந்த
அஞ்சுபுல வேடருக்கும் ஆற்றேன் பராபரமே. ௨௬௫

கன்னங் கரியஇருட் காமாதி ராட்சசப்பேய்க்
கென்னையிலக் காகவைத்த தென்னே பராபரமே. ௨௬௬

சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சன்மமற
முத்திநெறி கேட்டல் முறைதான் பராபரமே. ௨௬௭

சிந்தை சிதையச் சிதையாத ஆனந்தம்
எந்தவகை யாலேவந் தெய்தும் பராபரமே. ௨௬௮

கூர்த்தவறி வால்அறியக் கூடா தெனக்குரவன்
தேர்த்தபடி தானே தெரிந்தேன் பராபரமே. ௨௬௯

பத்த ருருந்தும் பரமசுகம் யானருந்த
எத்தனைநாள் செல்லும் இயம்பாய் பராபரமே. ௨௭௦

தீரத்தி னல்துறவு சேராமல் இவ்வுலகில்
பாரத் தனம்பேசல் பண்போ பராபரமே. ௨௭௧

இந்த வெளியினையும் பொய்யமிடப் பேரறிவாந்
தந்தவெளிக் கேவெளியாய்ச் சார்ந்தேன் பராபரமே. ௨௭௨

உணர்த்தும் உனைநாடா துணர்ந்தவையே நாடி
இணக்குறுமென் ஏழைமைதான் என்னே பராபரமே. ௨௭௩

முன்னேபோல் இன்றும் உலகைத் திரமெனவுள்
கொண்டோன் பெற்றபலன் கூறாய் பராபரமே. ௨௭௪

உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தேன் அக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன் பராபரமே. ௨௭௫

சித்த மவுனஞ் செயல்வாக் கெல்லாமவுனஞ்
சுத்தமவுனம் என்பால் தோன்றிற் பராபரமே. ௨௭௬

எண்ணில்பல கோடிஉயிர் எத்தனையோ அத்தனைக்குங்
கண்ணிற் கலந்தஅருட் கண்ணே பராபரமே. உஎஎ

எனக்கினியார் உன்போலும் இல்லையென்றால் யானும்
உனக்கினியா னாகா தொழிவேன் பராபரமே. உஎஅ

அண்டபிண்டங் காணேன் அகமும் புறமுமொன்றாக்
கண்ட என்னை நீகலந்த காலம் பராபரமே. உஎகூ

எத்தனையோ கோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலுஞ்
சித்தம் இரங்கிலையென் செய்வேன் பராபரமே. உஅ0

அன்றிருந்த நால்வருக்கும் அற்புதமாய் நீயுரைத்த
தொன்றிருந்த வார்த்தையெனக் குண்டோ பராபரமே. உஅக

அப்பனென்றும் அன்னையென்றும் ஆரியனென் றும்உனையே
செப்புவதும் உன்னிலையின் சீர்காண் பராபரமே. உஅஉ

கட்டுங் கனமும்அந்தக் காலர் வரும்போதெதிர்த்து
வெட்டுந் தளமோ விளம்பாய் பராபரமே. உஅங

பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும் பராபரமே. உஅச

கற்றாலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலும் இன்பம்உண்டோ பேசாய் பராபரமே. உஅரு

கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற அஞ்சனம்போல்
அண்டமெல்லாம் நின்னருளே அன்றோ பராபரமே. உஅசு

தன்செயலால் ஒன்றுமிலை தானென்றால் நான்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன் பராபரமே. உஅஎ

கொலைகளவு கட்காமங் கோபம்விட்டால் அன்றோ
மலையிலக்கா நின்னருள்தான் வாய்க்கும் பராபரமே. உஅஅ

தன்னை அறியாதுசகந் தானாய் இருந்துவிட்டால்
உன்னை அறியஅருள் உண்டோ பராபரமே. உஅகூ

ஒன்றிரண்டென் றுன்னா உணர்வுகொடுத் துள்ளபடி
என்றும்என்னை வையாய் இறையே பராபரமே. உகூ0

சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலும்
அல்லல் ஒழிவதென் றைக் கையா பராபரமே. ௫௦௫

பிடித்ததையே தாபிக்கும் பேரா ணவத்தை
அடித்துத் துரத்தவல்லார் ஆர்காண் பராபரமே. ௫௦௬

நேசத்தால் நின்னை நினைக்கும் நினைவுடையார்
ஆசைக் கடலில் அழுந்தார் பராபரமே. ௫௦௭

கள்ளாறு கட்டுணவுங் காரியமோ நான்ஒருசொல்
கொள்ளாத தோஷமன்றோ கூறாய் பராபரமே. ௫௦௮

சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமா
நின்றவர்க்கே ஆனந்த நிட்டை பராபரமே. ௫௦௯

நீட்சி குறுகல்இல்லா நித்யசுகா ரம்பசக
சாட்சியாம் உன்னைவந்து சார்ந்தேன் பராபரமே. ௫௧௦

வானாதி தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ
நானாகி நிற்பதெந்த நாளோ பராபரமே. ௫௧௧

காட்டத்தில் அங்கி கடையவந்தால் என்னவுன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே. ௫௧௨

நித்திரையாய்த் தானே நினைவயர்ந்தால் நித்தநித்தஞ்
செத்தபிழைப் பானதெங்கள் செய்கை பராபரமே. ௫௧௩

இன்பநிட்டை எய்தாமல் யாதெனினுஞ் சென்றுமனந்
துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே. ௫௧௪

பொய்யகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோர்
ஐயமில்லை ஐயமில்லை ஐயா பராபரமே. ௫௧௫

மந்திரத்தை உன்னி மயங்கா தெனக்கினியோர்
தந்திரத்தை வைக்கத் தகாதோ பராபரமே. ௫௧௬

விண்கருணை பூத்ததென்ன மேவிஉயிர்க் குயிராய்த்
தண்கருணை தோன்றஅருள் தாய்நீ பராபரமே. ௫௧௭

தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்றால்
சின்மயமாய் எல்லாம் நிகழும் பராபரமே. ௫௧௮

மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன் பராபரமே. ௩௩௩

உள்ள துணரா வுணர்விலிமா பாவியென்றே
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய் பராபரமே. ௩௩௪

எல்லாம் நின தெசெயல் என்றெண் ணும் எண்ணமும்நீ
அல்லால் எனக்குளதோ ஐயா பராபரமே. ௩௩௫

பந்த மயக்கிருக்கப் பற்றொழிந்தேன் என்றுளறும்
இந்த மயக்கம் எனக்கேன் பராபரமே. ௩௩௬

காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டனன்டோ யாதினுக்கும்
ஆட்சி உனதருளே அன்றோ பராபரமே. ௩௩௭

எட்டுந் திசையுமொன்றாய் இன்பமாய் நின்றவன்னை
விட்டுப் பிரியவிடம் வேறோ பராபரமே. ௩௩௮

பிரியா துயிர்க்குயிராய்ப் பின்னமற வோங்குஞ்
செறிவே அறிவே சிவமே பராபரமே. ௩௩௯

ஏதேது சொன்னாலும் எள்ளளவும் நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் பராபரமே. ௩௪௦

கற்பனையாப் பாடுகின்றேன் கண்ணீருங் கம்பலையுஞ்
சொற்பனத்துங் காணேனென் சொல்வேன் பராபரமே. ௩௪௧

வன்பொன்று நீங்கா மனதிறப்ப மாறாப்பேர்
அன்பொன்றும் போதுமெனக் கையா பராபரமே. ௩௪௨

ஏதுந் தெரியா எளியேனை வாவெனநின்
போதநிலை காட்டிற் பொருதோ பராபரமே. ௩௪௩

ஓராமல் எல்லாம் ஒழிந்தேறநின் தெய்வஅருள்
தாரா திருக்கத் தகுமோ பராபரமே. ௩௪௪

மோனந் தருஞான மூட்டி எனக்குவட்டா
ஆனந்த வாழ்க்கை அருளாய் பராபரமே. ௩௪௫

வாடுமுகங் கண்டென்னை வாடாமலேகாத்த
நீடுங் கருணை நிறைவே பராபரமே. ௩௪௬

உள்ளங் குழைய வுடல்குழைய வுள்ளிருந்த
கள்ளங் குழையஎன்று காண்பேன் பராபரமே. ௱௬௧

பட்டப் பகல்போலப் பாழ்த்தசிந்தை மாளின்எல்லாம்
வெட்ட வெளியாக விளங்கும் பராபரமே. ௱௬௨

பார்க்கின் அணுப்போற்கிடந்த பாழ்ஞ்சிந்தை மாளின்என்னை
யார்க்குச் சரியிடலாம் ஐயா பராபரமே. ௱௬௩

பாட்டுக்கோ அன்பினுக்கோ பத்திக்கோ அன்பர்தங்கள்
நீட்டுக்கெல் லாங்குழகி நின்றாய் பராபரமே. ௱௬௪

முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே. ௱௬௫

உன்று வெளியாய் உறங்காத பேருணர்வாய்
என்றுவிக் குள்ளே யிருந்தாய் பராபரமே. ௱௬௬

தத்துவமெல் லாமகன்ற தன்மையர்க்குச் சின்மயமா
நித்தமுத்த சுத்த நிறைவே பராபரமே. ௱௬௭

உள்ளக் கொதிப்பகல வுள்ளுள்ளே ஊறுந்த
வெள்ள மலர்க்கருணை வேண்டும் பராபரமே. ௱௬௮

என்னைப் புரப்பதரு ளின்கடனும் என்கடனும்
நின்னிற் பணியறவே நிற்கை பராபரமே. ௱௬௯

தானேயா நன்னிலையைத் தந்தருள் ஆனந்த
வானே மனதீத வாழ்வே பராபரமே. ௱௭௰

மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த நின்னிறைவைக்
கண்ணாரக் கண்டு களித்தேன் பராபரமே. ௱௭௧

அறியாமை ஈதென் றறிவித்த அன்றேதான்
பிரியா அருள்நிலையும் பெற்றேன் பராபரமே. ௱௭௨

தீதெனவும் நன்றெனவுந் தேர்ந்துநான் தேர்ந்தபடி
ஏதும் நடக்கவொட்டா தென்னே பராபரமே. ௱௭௩

கண்ட அறிவகண்டா காரமென மெய்யறிவில்
கொண்டவர்க்கே முத்தி கொடுப்பாய் பராபரமே. ௱௭௪

சாருக வல்வினைநான் என்றுமல் இன்பசுகம்
பேறும் படிக்கடிமை பெற்றேன் பராபரமே. ௩௭௫

பெற்றார் அநுபூதி பேசாத மோனநிலை
கற்றார் உனைப்பிரியார் கண்டாய் பராபரமே. ௩௭௬

நீயேநான் என்று நினைப்பும் மறப்புமறத்
தாயே அனையஅருள் தந்தாய் பராபரமே. ௩௭௭

சுற்றமுற் றெல்லாம்நீ தானென் றுணர்ந்தேன்என்
அஞ்சலியுங் கொள்ளாய் அரசே பராபரமே. ௩௭௮

பூதமுதல் நாதவரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்த இன்பக் கடலே பராபரமே. ௩௭௯

வாக்குமனம் ஒன்றுபட்ட வார்த்தையல்லால் வெவ்வேறாய்ப்
போக்குடைய வார்த்தை பொருந்தேன் பராபரமே. ௩௮௦

வன்மையின்றி எல்லாம் மதித்துணர்வாய்க் காகெடுவேன்
தன்மையொன்றுந் தோயாத் தடையோ பராபரமே, ௩௮௧

பத்தர்சித்தர் வாழிபரி பக்குவர்கள் வாழிசெங்கோல்
வைத்தவர்கள் வாழிதிரு வாழி பராபரமே. ௩௮௨

கல்லாதேன் ஆனாலுங் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே. ௩௮௩

சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச் சுகங்கொடுத்த
நல்லவர்க்கே கொத்தடிமை நான்காண் பராபரமே. ௩௮௪

முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் தடவிளைந்த தேனே பராபரமே. ௩௮௫

நித்திரையும் பாழ்த்த நினைவும்அற்று நிற்பதுவோ
சுத்த அருள்நிலைநீ சொல்லாய் பராபரமே. ௩௮௬

மண்ணும் மறிகடலும் மற்றுளவும் எல்லாம்உன்
கண்ணில் இருக்கவும்நான் கண்டேன் பராபரமே. ௩௮௭

பூட்டிவைத்து வஞ்சப் பொறிவழியே என்றனைநீ
ஆட்டுகின்ற தென்னோதான் அறியேன் பராபரமே. ருஅஅ

பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தேன்
உய்யும் வகையும் உளதோ பராபரமே. ருஅகூ

---

## சச. பைங்கிளிக்கண்ணி

அந்தமுடன் ஆதி அளவாமல் என்னறிவில்
சுந்தரமௌனச் சோதி துலங்குமோ பைங்கிளியே. க

அகமேவும் அண்ணலுக்கென் அல்லலெல்லாஞ் சொல்லச்
சமயமானாற் போய்ச் சகஞ்சொறிவா பைங்கிளியே. உ

ஆவிக்குள் ஆவிஎனும் அற்புதனார் சிற்சுகந்தான்
பாவிக்கும் எட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே. ங

ஆருமறி யாமல்எனை அந்தரங்க மாகவந்து
சேரும் படிஇறைக்குச் செப்பிவா பைங்கிளியே. ச

ஆறான கண்ணீர்க்கென் அங்கபங்க மானதையுங்
கூறாத தென்னே குதலைமொழிப் பைங்கிளியே. ரு

இன்பருள அடையவுனக் கேழமைக் கன்னல்சுத்த
அம்பரமாம் ஆடை அளிப்பாரே பைங்கிளியே. சா

உன்னுமல் ஒன்றிரண்டென் றோராமல் வீட்டுநெறி
சொன்னான் வரவும்வகை சொல்லாய்நீ பைங்கிளியே. எ

ஊருமிலார் பேருமிலார் உற்றார்பெற் றாருடனே
யாருமிலார் என்னை அறிவாரோ பைங்கிளியே. அ

ஊரைப்பா ராமல்எனக் குள்ளகத்து நாயகனார்
சீரைப்பார்த் தாற்கருணை செய்வாரோ பைங்கிளியே. கூ

என்று விடியும் இறைவாவோ என்றென்று
நின்ற நிலைஎல்லாம் நிகழ்த்தாய்நீ பைங்கிளியே. க0

எந்த மடலூடும் எழுதா இறைவடிவைச்
சிந்தைமட லாலெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே. கக

கண்ணுண் மணிபோல் இன்பங் காட்டி எனைப்பிரிந்த
பின்னவரும் இன்னம்வந்து சேர்வாரோ பைங்கிளியே. கஉ

ஏடார் மலர்சூடேன் எம்பெருமான் பொன்னடியாம்
வாடா மலர்முடிக்க வாய்க்குமோ பைங்கிளியே. கங

எல்லோன் மலரோன் களிக்கஅன்பே பூசைஎன்ற
நல்லோர்போல் வாளாவையும் நாடுவரோ பைங்கிளியே. கச

கண்டதனைக் கண்டு கலக்கந் தவிரெனவே
விண்டபெரு மானையுமென் மேவுவனோ பைங்கிளியே. கரு

காணாத காட்சி கருத்துவந்து காணாமல்
வீணாள் கழிந்து மெலிவேனோ பைங்கிளியே. கசு

காந்தம் இரும்பைக் கவர்ந்திழுத்தா லென்னஅருள்
வேந்தன் எனையிழுத்து மேவுவனோ பைங்கிளியே. கஎ

காதலால் வாடினனுங் கண்டிலையே எம்மிறைவர்
போதரவா யின்பம் புசிப்பேனோ பைங்கிளியே. கஅ

கட்டமைக்கொண் டன்பருண்மை கேளாப் பலவடிகொள்
பட்டிக்கும் இன்பருண்டோ சொல்லாய்நீ பைங்கிளியே. கக

கிட்டுராய் நெஞ்சிற் கிளர்வார் தழுவஎன்றால்
வெட்டவெ ளாவர்அவர் நேசமென்னே பைங்கிளியே. உ0

கூடுந் துணைமுயல்லாக் கொள்கையினர் என்கவலை
ஓடும் படிக்கும் அணைவாரோ பைங்கிளியே. உக

சன்னத்தி பெறியன்றன் சிந்தைகவர்ந் தாரிறைவர்
தன்னந் தனிமைய தவிப்பேனோ பைங்கிளியே. உஉ

சிந்தை மருவித் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதன்அருள் வாய்க்குமோ பைங்கிளியே. உங

சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை
அல்லும் பகலும் அணைவேனோ பைங்கிளியே. உச

தற்போதத் தாலே தலைகீழ தாகஐயன்
நற்போத இன்பவரா நாட்செலுமோ பைங்கிளியே. ௨௫

தன்னை அறியுந் தருணர் தனிற்றலைவர்
என்னையணை யாதவண்ணம் எங்கொளித்தார் பைங்கிளியே.

தாங்கரிய மையலெல்லாந் தந்தெனைவிட் டின்னருளாம்
பாங்கியைச்சேர் நாதர்இறைக்குப் பண்போசொல் பைங்கிளியே.

தாவியதோர் மர்க்கடமார் தன்மைவிட்டே அண்ணலிடத்
தோவியம்போல் நிற்கின்எனை உள்குவரோ பைங்கிளியே.

தீராக் கருவழக்கைத் தீர்வையிட்டங் கென்னைஇனிப்
பாரேறு தாண்டானைப் பற்றுவனோ பைங்கிளியே. ௨௯

தூங்கிவிழித் தென்னபலன் தூங்காமல் தூங்கிநிற்கும்
பாங்குகண் டால்அன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே.

தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
எல்லைஇலா இன்பமயம் எய்துவனோ பைங்கிளியே. ௩௧

நன்னெஞ்சத் தன்பரெல்லாம் நாதனைச்சேர்ந் தின்பணைந்தார்
வன்னெஞ்சத் தாலேநான் வாழ்விழந்தேன் பைங்கிளியே.

நானே கருதின்வர நாடார்சும் மாஇருந்தால்
தானே அணைவரவர் தன்மைஎன்னோ பைங்கிளியே. ௩௩

நீர்க்குமிழி போன்றவுடல் நிற்கையிலே சாசுவதஞ்
சேர்க்க அறியாமல் திகைப்பேனோ பைங்கிளியே. ௩௪

நெஞ்சகத்தில் வாழ்வார் நினைக்கின்வே றென்றணையார்
வஞ்சகத்தார் அல்லரவர் மார்க்கமென்னோ பைங்கிளியே.

பன்முத் திரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ்
சின்முத் திரைஅரசைச் சேர்வேனோ பைங்கிளியே. ௩௬

பச்சைகண்ட நாட்டிற் பறக்கும்உனைப் போற்பறந்தேன்
இச்சைஎல்லாம் அண்ணற் கியம்பிவா பைங்கிளியே. ௩௭

பாசபந்தஞ் செய்ததுன்பம் பாராமல் எம்மிறைவர்
ஆசைதந்த துன்பமதற் காற்றேன்நான் பைங்கிளியே. ௩௮

பாராசை அற்றிறையைப் பற்றறநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே. ௩௯

பேதைப் பருவத்தே பின்றொடர்ந்தென் பக்குவமுஞ்
சோதித்த அன்னைவந்து தோய்வாரோ பைங்கிளியே. ௪0

பைப்பயிரை நாடும்உன்போற் பார்பூத்த பைங்கொடிசேர்
செப்பயிரை நாடித் திகைத்தேன்நான் பைங்கிளியே. ௪௧

பொய்க்கூடு கொண்டு புலம்புகின்றேன் எம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே. ௪௨

பொய்ப்பணி வென்றேனைப் பொருட்படுத்தி அன்னைஎன்பால்
மெய்ப்பணியுந் தந்தொருகால் மேவுவனோ பைங்கிளியே. ௪௩

நன்றுறங்கும் இன்றுறங்கும் மற்றவரெல் லாமுறங்குந்
என்றுறங்கேன் எம்மிறைவர் காதலாற் பைங்கிளியே. ௪௪

மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீரஎன்னை
வெட்டவெளி வீட்டில்அண்ணல் மேவுவனோ பைங்கிளியே.

மாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலை வனத்தில்விட்ட பாவமென்னே பைங்கிளியே. ௪௬

மெய்யில்நோய் மாற்றவும்நம் மெத்தவுண்டெம் அண்ணல்தந்த
மையல்நோய் தீர்க்க மருந்தும்உண்டோ பைங்கிளியே. ௪௭

மேவுபஞ்ச வண்ணமுற்றாய் வீண்சிறையால் அல்லலுற்றாய்
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே. ௪௮

வாய்திறவா வண்ணமெனை வைத்தாண்டார்க் கென்துயரை
நீதிருவாய்ச் சொல்லின் க்ஷேமாங்காண் பைங்கிளியே. ௪௯

வாட்டப் படாத மவுனஇன்பங் கையாலே
காட்டிக் கொடுத்தானைக் காண்பேனோ பைங்கிளியே. ௫0

வாரா வரவாக வந்தருளும் மோனகுருவென்
பேராசை எல்லாம்போய்ப் பேசினை பைங்கிளியே. ௫௧

வினையவர்தம் பாலமுதும் வெப்பங்கா யாகஎன்பால்
பண்ணியதெம் அன்னைமையல் பார்த்தாயோ பைங்கிளியே.

விண்ணுள் வளியடக்கி வேறற்ற தென்ன அருள்
கண்ணுள் அடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளியே. ௫௩

விண்ணார் நிலவுதவழ் மேடையிலெல் லாருமுற
மண்ணான வீட்டிலென்னை வைத்ததென்னே பைங்கிளியே.

உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந்தென் கள்ளமெல்லாம்
வள்ளலறிந் தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே.

அகத்தை நீக்குமுன்னே ஆவித் துணைவரைநான்
தாகத்தின் வண்ணந் தழுவுவனோ பைங்கிளியே. ௫௬

தானே சுபாவந் தலைப்படநின் றான்ஞான
வானோ னவரும் வருவாரோ பைங்கிளியே. ௫௭

கள்ளத் தலைவரவர் கைகாட்டிப் பேசாமல்
உள்ளத்தில் வந்த உபாயமென்னே பைங்கிளியே, ௫௮

---

## ௪௫. எந்நாட் கண்ணி

### க. தெய்வ வணக்கம்

சீர்பூத்த வெள்ளி நிலவெறிப்ப மன்றாடுங்
கார்பூத்த கண்டனையான் காணுநாள் எந்நாளோ. க

பொன்னுருவ மன்றன்மணிப் பூவைவிழி வண்டுசுற்றும்
என்னா ரமுதின்நலம் இச்சிப்ப தெந்நாளோ. உ

நீங்கிமலக் கட்டறுத்து நேரே வெளியி லெம்மைத்
தூக்கிவைக்குந் தாளைத் தொழுதிடுநாள் எந்நாளோ. ௩

கருமுகங்காட் டாமலென்றுங் கர்ப்பூரம் வீசுந்
திருமுகமே நோக்கித் திருக்களிப்ப தெந்நாளோ. ௪

வெஞ்சே லெனும்விழியார் வேட்கைநஞ்சுக் கஞ்சினரை
அஞ்சேல் எனுங்கைக் கபயமென்ப தெந்நாளோ. ௫

நாளவங்கள் போகாமல் நன்னெறியைக் காட்டிஎமை
ஆளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ. அ

என்னறிவை உள்ளடக்கி என்போல் வருமவுனி
தன்னறிவுக் குள்ளேநான் சாருநாள் எந்நாளோ. கூ

ஆறுமொன்றை நாடின்அதற் காறுமுண்டா மென்றெமக்குக்
கூறும் மவுனியருள் கூடுநாள் எந்நாளோ. க0

நில்லாமல் நின்றருளை நேரேபா ரென்றவொரு
சொல்லால் மவுனியருள் தோற்றுநாள் எந்நாளோ. கக

வைதிகமாஞ் சைவ மவுனிமவு னத்தளித்த
மெய்யிகழ்ந்தென் அல்லல் விடியுநாள் எந்நாளோ. கஉ

வாக்கு மனமற்ற மவுனிமவு னத்தருளே
தாக்கவும்என் அல்லலெல்லாந் தட்டழிவ தெந்நாளோ. க௩

## ௩. அடியார் வணக்கம்

வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் திருஞான
சம்பந் தனையருளாற் சாருநாள் எந்நாளோ. க

ஏரின் சிவபோகம் இங்கிவற்கே என்னஉழ
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நாளோ. உ

பித்தரிறை என்றறிந்த பேதைபால் தூதனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ. ௩

போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூர் ஐயன்அன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ. ச

ஓட்டுடன்பற் றின்றி உலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ. ரு

கண்டதுபொய் என்றகண்டா காரசிவம் மெய்யெனவே
விண்டசிவ வாக்கியர்தாள் மேவுநாள் எந்நாளோ. சு

சக்கர வர்த்தி தவராச யோகியெனும்
மிக்கதிரு மூலன்அருள் மேவுநாள் எந்நாளோ. எ

சுத்தாநு பூதிபெற்றுச் சுத்தாநு பூதிசொன்ன
எந்தை அருள்நாடி இருக்குநாள் எந்நாளோ. ௮

எண்ணரிய சித்தர் இமையோர் முதலான
பண்ணவர்கள் பத்தரருள் பாலிப்ப தெந்நாளோ. ௯

## ௪. யாக்கையைப் பழித்தல்

சுக்கிலமும் நீருஞ் சொரிமலமும் நாறுமுடல்
புக்குழலும் வாழ்க்கையினிப் போதுமென்ப தெந்நாளோ. ௧

நீர்க்குமிழி போலமைக்கா லின்றுளதும் நில்லாமெய்
பார்க்கு மிடத்திதன்மேற் பற்றறுவ தெந்நாளோ. ௨

காக்கை நரிசெந்நாய் கழுகொருநாள் கூடியுண்டு
தேக்குமிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ. ௩

செங்கிருமி யாதி செனித்தசென்ம பூமியினை
இங்கெனுட லென்னும் இழுக்கொழிவ தெந்நாளோ. ௪

தத்துவர்தொண் ணூற்றறுவர் தாமாய்வாழ் இந்நாட்டைப்
பித்தன்நான் என்னும் பிதற்றொழிவ தெந்நாளோ. ௫

ஊனொன்றி நாதன் உணர்த்தும்அதை விட்டறிவேன்
நானென்ற பாவிதனை நாடுநாள் எந்நாளோ. ௬

வேலையிலா வேதன் விதித்தஇந்த்ர சாலவுடல்
மாயவி யாபார மயக்கொழிவ தெந்நாளோ. ௭

ஆழ்ந்த வினைக்கின் அரோசிகமாம் இவ்வுடலில்
வாழ்ந்து பெறும்பேற்றை மதிக்குநாள் எந்நாளோ. ௮

மும்மலச்சே றான முழுக்கும்பி பாகமெனும்
இம்மல காயத்துள் இகழ்ச்சிவைப்ப தெந்நாளோ. ௯

நாற்றமிக்க காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தெந்நாளோ. ௧௦

உருவிருப்ப வுள்ளேதான் ஊறும் மலக்கேணி
அருவருப்பு வாழ்க்கையைக்கண் டஞ்சுநாள் எந்நாளோ. ௧௧

## ரு. மாதர் மயக்கறுத்தல்

மெய்விகா ரத்தமெலாம் மின்மறைந்த தோல்மறைத்துப்
பொய்வீசும் மாயர் புலையொழிவ தெந்நாளோ. க

திண்ணியவெஞ் சப்பறையை நீக்கத் தழற்காட்டில்
கண்ணிவைப்போர் மாயங் கடக்குநாள் எந்நாளோ. உ

கண்டுமொழி பேசிமனங் கொண்டுகொண்டு நைவிலையாக்
கொண்டுவிடு மாதர்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ. ங

காமனைவா வென்றிருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாமம் மறந்தருளை நண்ணுநாள் எந்நாளோ. ச

கண்களில்வெண் பீளை கரப்பக் கருமையிட்ட
பெண்ணின்மயல் தப்பிப் பிழைக்குநாள் எந்நாளோ. ரு

வீங்கித் தளர்ந்து விழுமுலையார் மேல்வீழ்ந்து
தூங்குமதன் சோம்பைத் துடைக்குநாள் எந்நாளோ. சு

கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கும் இன்மாற்றம்
வைச்சிருக்கும் மாதர் மயக்கொழிவ தெந்நாளோ. எ

பச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமயல்
நச்சென் றறிந்தருளை நண்ணுநாள் எந்நாளோ. அ

உந்திச் சுழியால் உளத்தைச் சுழித்தகனை
தந்தித் தனத்தார் தலைமறப்ப தெந்நாளோ. கூ

கட்டுரைத்த சேலைக் கொய்சகத்திற் சிந்தையெல்லாங்
கட்டிவைக்கும் மாயமின்னார் கட்டொழிவ தெந்நாளோ. க0

ஆழாழி என்ன அளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயல் பற்றொழிவ தெந்நாளோ. கக

தூய பனித்திங்கள் சுடுமெனப் பித்தேற்று
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ. கஉ

ஏழைக் குறும்புசெயும் ஏந்திழையார் மோகமெனும்
பாழைக் கடந்து பயிராவ தெந்நாளோ. கங

சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோர் ஐந்துவகைத்
தத்துவத்தை நீங்கிஅருள் சாருநாள் எந்நாளோ. கஉ

பொல்லாத காமப் புலைத்தொழிலில் என்னறிவு
செல்லாமல் நன்னெறியிற் சேருநாள் எந்நாளோ. கங

அடிகளடிக் கீழ்க்குடியாய் யாம்வாழ வண்ணங்
குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ. கச

ஆன புறக்கருவி ஆறுபத்தும் மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புல்முளைப்ப தெந்நாளோ. கரு

அந்தகனுக் கெந்தை இருளானவா றுஅறிவில்
வந்த இருள்வேலை வடியுநாள் எந்நாளோ. கசு

புன்மலத்தைச் சேர்ந்தமல போதம் பொருந்துதல்போய்
நின்மலத்தைச் சேர்ந்துமல நீங்குநாள் எந்நாளோ. கஎ

கண்டுகண்டுந் தேறாக் கலக்கமெல்லாந் தீர்வண்ணம்
பண்டைவினை வேரைப் பறிக்குநாள் எந்நாளோ. கஅ

பைங்கூழ் வினைதான் படுசாவி யாகஎமக்
கெங்கோன் கிரணவெயில் எய்துநாள் எந்நாளோ. ககூ

குறித்தவித மாதியாற் கூடும்வினை எல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணம்அருள் வந்திடுநாள் எந்நாளோ.

சஞ்சிதமே யாதி சரக்கான முச்சேறும்
வெந்தபொரி யாகஅருள் மேவுநாள் எந்நாளோ. உக

தேகமுதல் நான்காத் திரண்டொன்றாய் நின்றிலகும்
மோகமிகு மாயை முடியுநாள் எந்நாளோ. உஉ

சத்த முதலாத் தழைத்திங் கெமக்குணர்த்துஞ்
சுத்தமா மாயை தொடக்கறுவ தெந்நாளோ. உங

எம்மை வினையை இறையைஎம்பாற் காட்டாத
அம்மை திரோதை அகலுநாள் எந்நாளோ. உச

நித்திரையாய் வந்து நினைவழிக்குங் கேவலமாஞ்
சத்துருவை வெல்லுஞ் சமர்த்தறிவ தெந்நாளோ. உரு

இன்னல்பின்ன லான சகலமெனுங் குப்பையிடை
முன்னவன்ஞா னக்கனலை மூட்டுநாள் எந்நாளோ. உ௬

மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா அருளைத் தொடருநாள் எந்நாளோ. உ௭

## ௭. தன்னுண்மை

உடம்பறியும் என்னும்அந்த ஊழலெல்லாந் தீரத்
திடம்பெறவே எம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ. ௧

நேர்மையறி வாலறிந்த நேகாகிக் குள்ளிசைந்து
எம்மைப் புலப்படவே யாமறிவ தெந்நாளோ. ௨

தத்துவமாம் பாழ்த்த சடவுருவைத் தான்சுமந்த
சித்துருவாம் எம்மைத் தரிசிப்ப தெந்நாளோ. ௩

பஞ்சப் பொறியைஉயி ரென்னும்அந்தப் பஞ்சமறச்
செஞ்செவே எம்மைத் தரிசிப்ப தெந்நாளோ. ௪

அந்தக் கரணமுயி ராமென்ற அந்தரங்க
சிந்தைக் கணத்தில் எம்மைத் தேர்ந்தறிவ தெந்நாளோ. ௫

முக்குணத்தைச் சீவனென்னும் மூடத்தை விட்டருளால்
அக்கணமே எம்மை அறிந்துகொள்வ தெந்நாளோ. ௬

காலஉயிர் என்னுங் கலாதிகள்சொற் கேளாமல்
சீலருடன் எம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ. ௭

வான்கெடுத்துத் தேடும் மதிகேடர் போலஎமை
நான்கெடுத்துத் தேடாமல் நன்கறிவ தெந்நாளோ. ௮

## ௮. அருளியல்பு

ஊனர் தருநா டிதுநமக்கு வேண்டாவென்
றுணர்ந்த நாட்டில் அவதரிப்ப தெந்நாளோ. ௧

பொய்க்காட்சி யான புவனத்தை விட்டருளாம்
மெய்க்காட்சி யாம்புவனம் மேவுநாள் எந்நாளோ. ௨

ஆதியந்தங் காட்டாமல் அம்பரம்போ லேநிறைந்த
நீதில் அருட்கடலைச் சேருநாள் எந்நாளோ. ௩

எட்டுத் திசைக்கீழ்மேல் எங்கும் பெருகிவரும்
வெட்டவெளி விண்ணாற்றின் மெய்தோய்வ தெந்நாளோ. ௪

ஆதான மென்ற சுருதியெல்லாம் ஓலமிடும்
மீதான மானவெற்பை மேவுநாள் எந்நாளோ. ௫

வெந்தவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்ணருளாய்
வந்துபொழி கின்ற மழைகாண்ப தெந்நாளோ. ௬

சூரியர்கள் சந்திரர்கள் தோன்றாச் சுயஞ்சோதிப்
பூரணதே யத்திற் பொருந்துநாள் எந்நாளோ. ௭

கன்றுமன வெப்பக் கவலையெலாந் தீரஅருள்
தென்றல்வந்து வீசுவெளி சேருநாள் எந்நாளோ. ௮

கூட்டுமன் செங்கோல் நடாவடிக்குங் கோலாக
வெட்ட வெளிப்பொருளை மேவுநாள் எந்நாளோ. ௯

சாலக் கபாடத் தடைதீர எம்பெருமான்
ஓலக்க மண்டபத்துள் ஓடுநாள் எந்நாளோ. ௧௦

விண்ணவன் தாளொன்றும் விரிநிலா மண்டபத்தில்
தண்ணீர் அருந்தித் தளர்வொழிவ தெந்நாளோ. ௧௧

வெய்ய புவிபார்த்து விழித்திருந்த அல்லலறத்
துய்ய அருளில் துயிலுநாள் எந்நாளோ. ௧௨

வெய்ய பிறவிவெயில் வெப்பமெல்லாம் விட்டகல
ஐயனடி நீழல் அணையுநாள் எந்நாளோ. ௧௩

வாதைப் பிறவி வளைகடலை நீந்தஐயன்
பாதப் புணைஇணையைப் பற்றுநாள் எந்நாளோ. ௧௪

ஈனமில்லா மெய்ப்பொருளை இம்மையிலே காணவெளி
ஞானமெனும் அஞ்சனத்தை நான்பெறுவ தெந்நாளோ. ௧௫

எல்லா மிறந்தவிடத் தெந்தைநிறை வாம்வடிவைப்
புல்லாமற் புல்லிப் புணருநாள் எந்நாளோ. ௧௬

உடற்குயிர் போலெமக்குத் தானுயிராய் ஞானம்
விடற்கருமறை யன்றுபரை நாம்விடுவ தெந்நாளோ. ௧௭

எக்கணுமாந் துன்ப இருட்கடலை விட்டருளாம்
மெய்க்கரையை ஏறி வெளிப்படுவ தெந்நாளோ. ௧௮

## ௯. பொருளியல்பு

எவ்விளக்கின் பின்னேபோய்க் காண்பார்போல் மெய்ஞ்ஞான
மெய்விளக்கின் பின்னேபோய் மெய்காண்ப தெந்நாளோ. ௧

கேடில்பசு பாசமெல்லாங் கீழ்ப்படவுந் தானேமேல்
ஆடுஞ் சிவப்பொருளை அன்புறுவ தெந்நாளோ. ௨

ஆணவத்தை நீக்கி அறிவூடே ஐவகையாந்
தானவத்தைக் கப்பாலைச் சாருநாள் எந்நாளோ. ௩

நீக்கப் பிரியா நினைக்கமறக் கக்கூடாப்
போக்குவர வற்ற பொருளணைவ தெந்நாளோ. ௪

அண்டருக்கும் எய்ப்பில்வைப்பாம் ஆரமுதை என்அகத்தில்
கண்டுகொண்டு நின்று களிக்கும்நாள் எந்நாளோ. ௫

காட்டுந் திருவருளே கண்ணாகக் கண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநாள் எந்நாளோ. ௬

நானென்ற தன்மை நழுவியே எவ்வுயிர்க்குந்
தானென்ற உண்மைதனைச் சாருநாள் எந்நாளோ. ௭

தீங்கை மறந்த திருவருளாய் நிற்பவர்பால்
எந்தப்பொருளும் எவ்வுயிர்தான் வாழ்விப்ப தெந்நாளோ. ௮

எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் வியாபகமாய்
உள்ளதொன்றை உள்ளபடி ஓருநாள் எந்நாளோ. ௯

அருவுருவம் எல்லாம் அகன்றதுவா யான
பொருளொன்று வந்து புலப்படுவ தெந்நாளோ. ௧௦

ஆரணமுங் காணா அகண்டிதா காரபரி
பூரணமாந் தெய்வமதைப் பொருந்துநாள் எந்நாளோ. ௧௧

சத்தொடுசித் தாகித் தயங்கிய ஆனந்தபரி
சுத்த அகண்டசிவந் தோன்றுநாள் எந்நாளோ. ௧௨

எங்கெங்கும் பார்த்தாலும் இன்புருவாய் நீக்கமின்றித்
தங்கும் தனிப்பொருளைச் சாருநாள் எந்நாளோ. ௧௩

அடிமுடிகாட் டாதசுத்த அம்பரமாஞ் சோதிக்
கடுவெளிவந் தென்னைக் கலக்குநாள் எந்நாளோ. ௧௪

ஒன்றனையுங் காட்டா உளத்திருளைச் சூறையிட்டு
நின்றபரஞ் சோதியுடன் நிற்குநாள் எந்நாளோ. ௧௫

எந்தச் சமயம் இசைந்தும்அறி வூடறிவாய்
வந்தபொரு ளேபொருளா வாஞ்சிப்ப தெந்நாளோ. ௧௬

எவ்வாறிங் குற்றுணர்ந்தார் யாவர் அவர்தமக்கே
அவ்வாறாய் நின்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ. ௧௭

பெண்ணாண் அலியெனவும் பேசாமல் என்அறிவின்
கண்ணூடே நின்றஒன்றைக் காணுநாள் எந்நாளோ. ௧௮

நினைப்பும் மறப்பும்அற நின்ற பரஞ்சோதி
தனைப்புலமா என்னறிவிற் சந்திப்ப தெந்நாளோ. ௧௯

## ௧௦. ஆனந்த இயல்பு

பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளமுற்று
நீச்சுநிலை காணாமல் நிற்குநாள் எந்நாளோ. ௧

சித்தந் தெளிந்தோர் தெளிவில் தெளிவான
சுத்த சுகக்கடலுள் தோயுநாள் எந்நாளோ. ௨

சிற்றின்ப முண்டுழ் சிதையஅனந் தங்கடல்போல்
முற்றின்ப வெள்ளம்எமை மூடுநாள் எந்நாளோ. ௩

எல்லையில்பே ரின்பமயம் எப்படிஎன் றோர்தமக்குச்
சொல்லறியா ஊமர்கள்போற் சொல்லுநாள் எந்நாளோ. ௪

அண்டாண்ட கோடி அனைத்தும் உகாந்தவெள்ளங்
கொண்டதெனப் பேரின்பங் கூடுநாள் எந்நாளோ. ௫

ஆதியந்த மில்லாத ஆதிஅநா தியினனுஞ்
சோதிஇன்பத் தூடே துளையுநாள் எந்நாளோ. ௬

சாலோக மாதி சவுக்கியமும் விட்டநம்பால்
மேலான ஞான இன்பம் மேவுநாள் எந்நாளோ. ௭

தற்பரத்தி னுள்ளேயுஞ் சாலோக மாதியெனும்
பொற்பறிந்தா னந்தம் பொருந்துநாள் எந்நாளோ. ௮

உள்ளத்தி னுள்ளே தான் ஊறுஞ் சிவானந்த
வெள்ளந் திளைத்து விடாய்தீர்வ தெந்நாளோ. ௯

கன்னலுடன் முக்கனியுங் கற்கண்டுஞ் சீனியுமாய்
மன்னும்இன்ப ஆரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ. ௧௦

மண்ணூறு மூன்ற மயக்கமெல்லாந் தீர்ந்திடவும்
விண்ணூ றெழுந்தசுகம் மேவுநாள் எந்நாளோ. ௧௧

கானற் சலம்போன்ற கட்டுழலைப் பொய்த்திர
வானமுத வாவி மருவுநாள் எந்நாளோ. ௧௨

தீங்கரும்பென் றால்இனியா தின்றால் இனிப்பனபோல்
பாங்குதயம்பே ரின்பம் படைக்குநாள் எந்நாளோ. ௧௩

புண்ணிய பாவங்கள் பொருந்தாமெய் யன்பரெல்லாம்
நண்ணியபே ரின்பசுகம் நானணைவ தெந்நாளோ. ௧௪

## ௧௧. அன்புநிலை

தக்கரவி கண்ட சரோருகம்போல் என்னிதயம்
மிக்கஅருள் கண்டு விகசிப்ப தெந்நாளோ. ௧

வானமுகில் கண்ட மயூரபட்சி போலஐயன்
ஞானநடங் கண்டு நடிக்குநாள் எந்நாளோ. ௨

சந்திரனை நாடுஞ் சகோரபட்சி போல்அறிவில்
வந்தபரஞ் சோதியையான் வாஞ்சிப்ப தெந்நாளோ. ௩

சூத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்றாட்டுஞ்
சித்தனைஎன் கண்ணுறல் தரிசிப்ப தெந்நாளோ. ௪

அந்தரத்தே நின்றாடும் ஆனந்தக் கூத்தனுக்கென்
சிந்தை திறைகொடுத்துச் சேவிப்ப தெந்நாளோ. ௫

கள்ளனிவன் என்றுமெள்ளக் கைவிடுதல் காரியமோ
வள்ளலே என்று வருந்துநாள் எந்நாளோ. ௬

விண்ணாடர் காணா விமலா பரஞ்சோதி
அண்ணாவா வாவென் றரற்றுநாள் எந்நாளோ. ௭

ஏதேது செய்தாலும் என்பணிபோய் நின்பணியாம்
மாதேவா என்று வருந்துநாள் எந்நாளோ. ௮

பண்டுங்கா ணேன்நான் பழம்பொருளே இன்றும்உனைக்
கண்டுங்கா ணேன்எனவுங் கைதவிப்ப தெந்நாளோ. ௯

பொங்கேத மான புழுக்கமெலாந் தீரஇன்பம்
எங்கேஎங் கேஎன் றிரங்குநாள் எந்நாளோ. ௧௰

கடலின்மடை கண்டதுபோற் கண்ணீ ராறாக
உடல்வெதும்பி மூர்ச்சித் துருகுநாள் எந்நாளோ. ௧௧

புலர்ந்தேன் முகஞ்சருகாய்ப் போனேன் நிற்காண
புலர்ந்தேன்என் றேங்கி அழுங்குநாள் எந்நாளோ. ௧௨

புன்னீர்மை யாளர் புலம்புமா போற்புலம்பிக்
கண்ணீருங் கம்பலையுங் காட்டுநாள் எந்நாளோ. ௧௩

போற்றேனென் றாலும்என்னைப் புந்திசெயும் வேதனைக்கிங்
காற்றேன்ஆற் றேனென் றரற்றுநாள் எந்நாளோ. ௧௪

பொய்ம்முடங்கும் பூமிசில போட்டலறப் பூங்கமலன்
கைம்முடங்க நான்சனனக் கட்டறுவ தெந்நாளோ. ௧௫

கற்குணத்தைப் போன்றவஞ்சக் காரர்கள்கை கோவாமல்
நற்குணத்தார் கைகோத்து நான்திரிவ தெந்நாளோ. ௧௬

துட்டனைமா மாயைச் சுழல்நீக்கி அந்தரமே
விட்டனையோ என்று வியக்குநாள் எந்நாளோ. ௧௭

## கஎ. அன்பர்நெறி

அத்துவா எல்லாம் அடங்கச்சோ தித்தபடிச்
சித்துருவாய் நின்றோர் தெளிவறிவ தெந்நாளோ. க

மூச்சற்றுச் சிந்தை முயற்சியற்று மூதறிவாய்ப்
பேச்சற்றோர் பெற்றதொன்றைப் பெற்றிடுநாள் எந்நாளோ. உ

நோட்டாலே யான குணமற்றந் நிர்க்குணத்தோர்
தேட்டாலே தேடுபொருள் சேருநாள் எந்நாளோ. ங

வெறுத்தே பசுத்துவத்தைக் கேடிலா ஆனந்த
மடுத்தோ ரடுத்தபொருட் கார்வம்வைப்ப தெந்நாளோ. ச

கற்கண்டால் ஓடுகின்ற காக்கைபோல் பொய்ம்மாயச்
சொற்கண்டால் ஓடும்அன்பர் தோய்வறிவ தெந்நாளோ. ரு

மெய்த்தகுலங் கல்விபுனை வேடமெலாம் ஓடவிட்ட
சித்தரொன்றுஞ் சேராச் செயலறிவ தெந்நாளோ. சு

சுற்றச் சமயக் குறும்படர்ந்து நற்போதம்
அற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ. எ

தர்க்கமிட்டுப் பாழாஞ் சமயக் குதர்க்கம்விட்டு
நிற்குமவர் கண்டவழி நேர்பெறுவ தெந்நாளோ. அ

வீறியவே தாந்தமுதல் மிக்ககலாந் தம்வரை
ஆறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ. கூ

கண்டவிட மெல்லாங் கடவுள்மயம் என்றறிந்து
கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்ப தெந்நாளோ.

பாக்கியங்க ளெல்லாம் பழுத்து மனம்பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்குநாள் எந்நாளோ. கக

எவ்வுயிருந் தன்னுயிர்போல் எண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ. கஉ

## ௧௩. அறிஞர் உரை

இருநிலனாய்த் தீயாகி என்ற திருப்பாட்டின்
பெருநிலையைக் கண்டனைத்துப் பேச்சறுவ தெந்நாளோ. ௧

அற்றவர்கட் கற்றசிவன் ஆமென்ற அத்துவித
முற்றுமொழி கண்டருளில் மூழ்குநாள் எந்நாளோ. ௨

நானென்னை முன்படைத்தான் என்ற தகவுரையை
நாமென்றே உண்மைபெற்று நாமுணர்வ தெந்நாளோ. ௩

என்னுடைய தோழனுமாய் என்ற திருப்பாட்டின்
நன்னெறியைக் கண்டடிமை நான்செய்வ தெந்நாளோ. ௪

ஆருடனே சேரும் அறிவென்ற அவ்வுரையைத்
தேரும் படிக்கருள்தான் சேருநாள் எந்நாளோ. ௫

உன்னில்உன் னும் என்ற உறுமொழியால் என்னிதயந்
தன்னில்உன்னி நன்னெறியைச் சாருநாள் எந்நாளோ. ௬

நினைப்பறவே தான்நினைந்தேன் என்ற நிலைநாடி
அனைத்துமாம் அப்பொருளில் ஆழுநாள் எந்நாளோ. ௭

சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாகி
நின்றுவிடும் என்றநெறி நிற்குநாள் எந்நாளோ. ௮

ஆதியந்த மில்லா அரியபரஞ் சோதியென்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குநாள் எந்நாளோ. ௯

பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தேன் என்ற
நெறியுடையான் சொல்லில்நிலை நிற்குநாள் எந்நாளோ. ௧௦

திரையற்ற நீர்போல் தெளிய எனத்தேர்ந்த
உரைபற்றி உற்றங் கொடுங்குநாள் எந்நாளோ. ௧௧

அறியா அறிவில் அவிழ்ந்தேற என்ற
நெறியாம் உரையுணர்ந்து நிற்குநாள் எந்நாளோ. ௧௨

எனக்குள் நீஎன்றும் இயற்கையாப் பின்னும்
உனக்குள்நான் என்ற உறுதிகொள்வ தெந்நாளோ. ௧௩

அறிவை அறிவதுவே யாதும் பொருளென்
றுறுதிசொன்ன உண்மையினை ஓருநாள் எந்நாளோ. ௧௩

## ௧௪. நிற்குநிலை

பண்ணின் இசைபோலப் பரமன்பால் நின்றதிறன்
எண்ணி அருளாகி இருக்குநாள் எந்நாளோ. ௧

அறிவோ டறியாமை அற்றறிவி னூடே
குறியி லறிவுவந்து கூடுநாள் எந்நாளோ. ௨

சொல்லான் மனத்தால் தொடாச்சம் பூரணத்தில்
நில்லா நிலையாய் நிலைநிற்ப தெந்நாளோ. ௩

செங்கதிரின் முன்மதியந் தேசடங்கி நின்றிடல்போல்
அங்கணனார் தாளில் அடங்குநாள் எந்நாளோ. ௪

வானூ டடங்கும் வளிபோல இன்புருவாங்
கோனூ டடங்குங் குறிப்பறிவ தெந்நாளோ. ௫

செப்பரிய தன்கருணைச் சிற்சுகனார் பூரணத்தில்
அப்பினிடை உப்பாய் அணையுநாள் எந்நாளோ. ௬

தூய அறிவான சுகரூப சோதிதன்பால்
தீயில் இரும்பென்னத் திகழுநாள் எந்நாளோ. ௭

தீதனையாக் கர்ப்பூர தீபமென நான்கண்ட
சோதியுட னொன்றித் துரிசறுவ தெந்நாளோ. ௮

ஆராருங் காணாத அற்புதனார் பொற்படிக்கீழ்
நீரார் நிழல்போல் நிலாவுநாள் எந்நாளோ. ௯

எட்டத் தொலையாத எந்தைபிரான் சந்நிதியில்
பட்டப் பகல்விளக்காய்ப் பண்புறுவ தெந்நாளோ. ௧௦

கருப்புவட்டை வாய்மடுத்துக் கண்டார்நாப் போல
விருப்புவட்டா இன்புருவை மேவுநாள் எந்நாளோ. ௧௧

துச்சப் புலனாற் சுழலாமல் தண்ணருளால்
உச்சிக் கதிர்ப்படிகம் ஒவ்வுநாள் எந்நாளோ. ௧௨

இம்மா நிலத்தி லிருந்தபடி யேயிருந்து
சும்மா அருளைத் தொடருநாள் எந்நாளோ. ௧௩

தானவனார் தன்மையெய்தித் தண்டமென அண்டமெங்கும்
ஞான மதயானை நடத்துநாள் எந்நாளோ. ௧௪

ஒன்றிரண்டு மில்லதுவாய் ஒன்றிரண்டு முள்ளதுவாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ. ௧௫

பாசம் அகலாமல் பதியில் கலவாமல்
மாசில் சமத்துமுத்தி வாய்க்குநாள் எந்நாளோ. ௧௬

சிற்றறிவு மெள்ளச் சிதைந்தெம்மான் பேரறிவை
உற்றறியா வண்ணமறிந் தோங்குநாள் எந்நாளோ. ௧௭

தந்திரத்தை மந்திரத்தைச் சாரின்மனை யாம்அறிவென்
றொற்றையுணர் வேவடிவாய் எய்துநாள் எந்நாளோ. ௧௮

போக்குவர வற்றவெளி போல்நிறைந்த போதநிலை
நீக்கமறக் கூடி நினைப்பறுவ தெந்நாளோ. ௧௯

காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்றவந்த
வீண்பாவம் போயதுவாய் மேவுநாள் எந்நாளோ. ௨௦

வாடாதே ஈனாவாய் மாயாதே எங்கோவை
நாடாதே நாடி நலம்பெறுவ தெந்நாளோ. ௨௧

ஆடலையே காட்டிஎன நாடலொழித் தாண்டான்பொற்
றாள்தலைமேல் சூடித் தழைக்குநாள் எந்நாளோ. ௨௨

மேலொடுகீ ழில்லாத வித்தகனார் தம்முடனே
பாலொடுநீர் போற்கலந்து பண்புறுவ தெந்நாளோ. ௨௩

அறியா தறிந்தெமையாள் அண்ணலை நாமாகக்
குறியாத வண்ணங் குறிக்குநாள் எந்நாளோ. ௨௪

ஓராமல் மந்திரமும் உன்னாமல் நம்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநாள் எந்நாளோ. ௨௫

ஊன்பற்றும் என்னோ டுறவுபற்றும் பூரணன்பால்
மான்பற்றுங் கண்போல் மருவுநாள் எந்நாளோ. ௨௬

ஆண்டான் மயமி அளித்தருளி வாலறிவைத்
தாண்டாமல் தாண்டித் துலங்குநாள் எந்நாளோ. ௨௭

ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ. ௨௮

## ௨௫. நிலைபிரிந்தோர் கூறுதற் குபாயம்

தன்ம நெறிதப்பிற் றவிராதென் றெந்நாளும்
நன்மைதரு ஞானநெறி நானினைவ தெந்நாளோ. ௧

ஞானநெறி தானே நழுவிடினும் முப்பதத்தர்
ஆனமுத்தி நன்றெனவே அன்புறுவ தெந்நாளோ. ௨

பன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சொன்மார்க்கங் கண்டு துலங்குநாள் எந்நாளோ. ௩

அத்துவித மென்ற அந்நியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடருநாள் எந்நாளோ. ௪

கேட்டல்முதல் நான்காலே கேடிலா நாற்பதமும்
வாட்டமற எனக்கு வாய்க்குநாள் எந்நாளோ. ௫

என்னை யான் என்பதற எவ்விடமும் என்னுசான்
சந்நிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ. ௬

நாம்பிரம மென்றால் நடுவேயொன் றண்டாமல்
தேம்பிஎல்லா மொன்றாய்த் திகழுநாள் எந்நாளோ. ௭

முச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ. ௮

எவ்வடிவும் பூரணமாம் எந்தையுரு வென்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே அடங்குநாள் எந்நாளோ. ௯

சிந்தித்த தெல்லாஞ் சிவபூ ரணமாக
வந்தித்து வாழ்த்தி வணங்குநாள் எந்நாளோ. ௧௦

தாங்கியபார் விண்ணுதி தானெனஞா னுங்கிளியாய்
தங்குமிர் யோகவுணர் வுற்றிடுநாள் எந்நாளோ. ௧௧

ஆசனமூர்த் தங்க ளறவகண்டா காரசிவ
பூசைசெய ஆசை பொருந்துநாள் எந்நாளோ. கஉ

அஞ்செழுத்தின் உண்மை அறிவான அப்பொருளை
நெஞ்செழுத்தி னொன்றாகி நிற்குநாள் எந்நாளோ. கங

அவ்வுயிர்போல் எவ்வுயிரும் ஆனபிரான் தன்னடிமை
எவ்வுயிரு மென்றுபணி யாஞ்செய்வ தெந்நாளோ. கச

நேசிகர்சோ றுண்ணத் திறன்மகனை நாந்தமக்கு
வாசி கொடுக்க மகிழுநாள் எந்நாளோ. கரு

குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி
அருள்மயமென் றன்புற் றருள்பெறுவ தெந்நாளோ. கசு

---

## சங. காண்பேனே என்கண்ணி

---

சிந்திக்குந் தோறுந் தெவிட்டா அமுதேஎன்
புந்திக்குள் நீதான் பொருந்திடவுங் காண்பேனே. க

கேவலத்தில் என்றிடந்து கீழ்ப்படா தின்பஅருள்
காவலன்பா லொன்றிக் கலந்திடவுங் காண்பேனே. உ

துரியங் கடந்தொன்றே வெளியாய் நின்ற
பெரியநிறை வேஉன்னைநான் பெற்றிடவுங் காண்பேனே. ங

மாசற்ற அன்பர்நெஞ்சே மாறாத பெட்டகமாத்
தேசற்ற மாமணிநின் தேசினையுங் காண்பேனே. ச

மாயா விகார மலமகல எந்தைபிரான்
நேயாநு பூதி நிலைபெறவுங் காண்பேனே. ரு

பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே
மெய்யநினை மெய்யெனவே மெய்யுடனே காண்பேனே. சு

வாலற்ற பட்டமென மாயா மனப்படலங்
காலற்று வீழவும்முக் கண்ணுடையாய் காண்பேனே. எ

உள்ளும் புறம்பும் ஒருபடித்தாய் நின்றசுகங்
கொள்ளும் படிக்கிறைஞ் கூட்டிடவுங் காண்பேனோ. ௮

காட்டுகின்ற முக்கட் கரும்பே கனிமேயான்
ஆட்டமெல்லாந் தீரஉன தாடலையுங் காண்பேனோ. ௯

தூங்காமல் தூங்கிச் சுகப்பெருமான் சந்நிதியில்
நீங்காமல் நிற்கும் நிலைபெறவுங் காண்பேனோ. ௧0

வாராது நாளிந்நா வான்கருணை யால்விழுந்தும்
போராது சேரேன்நின் பொன்னடியுங் காண்பேனோ. ௧௧

சாட்டைஇலாப் பம்பரம்போல் ஆடுஞ் சடசால
நாட்டமற எந்தைசுத்த ஞானவெளி காண்பேனோ. ௧௨

மன்றுடைய வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக்
குன்றேநின் தாட்கீழ்க் குடிபெறவுங் காண்பேனோ. ௧௩

பொய்யென் றறிந்தும்எமைப் போகவொட்டா தையஇந்த
வையக் கனமயக்க மாற்றிடவுங் காண்பேனோ. ௧௪

தாயினும் நல்ல தயாநிதியே நின்னைஉள்ளித்
தீயின்மெழு கொத்துருகுஞ் சிந்தைவரக் காண்பேனோ. ௧௫

என்செயினும் என்பெறினும் என்னிறைவா ஏழையன்யான்
நின்செயலென் றென்றும் நினைவுவரக் காண்பேனோ. ௧௬

எள்ளத் தனையும் இரக்கமிலா வன்பாவி
உள்ளத்தும் எந்தை உலவிடவுங் காண்பேனோ. ௧௭

வஞ்சகத்துக் காலயமாம் வல்வினையேன் ஆகெடுவேன்
நெஞ்சகத்தில் நீயாநீ நேர்பெறவுங் காண்பேனோ. ௧௮

தொல்லைப் பிறவித் துயர்கெடவும் எந்தைபிரான்
மல்லற் கருணை வழங்கிடவுங் காண்பேனோ. ௧௯

வாளாருங் கண்ணார் மயற்கடலில் ஆழ்ந்தேன்சற்
றுளாக எந்தை அருள்செயவுங் காண்பேனோ. ௨0

பஞ்சாய்ப் பறக்குநெஞ்சப் பாவியைக் கூவிஐயா
அஞ்சாதே என்றின் னருள்செயவுங் காண்பேனோ. ௨௧

ஆடு கறங்காகி அலமந் தழன்றுமனம்
வாடுமெனை றயாநீ வாவெனவுங் காண்பேனே. ௨௨

சிட்டர்க் கெளிய சிவனேயோ தீவினையேன்
மட்டற்ற ஆசை மயக்கறவுங் காண்பேனே. ௨௩

உள்நின் றுணர்த்தும் உவப்பிலா ஒன்றேநின்
தண்மையென்ற சாந்த அருள் சார்ந்திடவுங் காண்பேனே. ௨௪

ஓடுங் கருத்தொடுங்க உள்ளுணர்வு தோன்றநினைக்
கூடும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனே. ௨௫

வாக்கால் மனத்தால் மதிப்பரியாய் நின்னருளை
நோக்காமல் நோக்கிநிற்கும் நுண்ணறிவு காண்பேனே. ௨௬

இவ்வுடம்பு நீங்குமுனே எந்தாய்கேள் நின்னருளாம்
அவ்வுடம்புக் குள்ளே அவதரிக்கக் காண்பேனே. ௨௭

நித்தமாய் ஒன்றாய் நிரஞ்சனமாய் நிர்க்குணமாஞ்
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனே.

கண்ணிறைந்த மோனக் கருத்தேஎன் கண்ணேஎன்
உள்நிறைந்த மாயை ஒழிந்திடவுங் காண்பேனே. ௨௯

அத்தா விமலா அருளாளா ஆனந்த
சித்தா எனக்குன் அருள் செய்திடவுங் காண்பேனே. ௩0

வீணே பிறந்திறந்து வேசற்றேன் ஆசையறக்
காணேன் இறைநின் கருணைபெறக் காண்பேனே. ௩௧

சட்டையொத்த இவ்வுடலைத் தள்ளுமுன்னே நான்சகச
நிட்டையைப் பெற்றையா நிருவிகற்பங் காண்பேனே. ௩௨

எல்லாந் தெரியும் இறைவாஎன் அல்லலெல்லாஞ்
சொல்லாமுன் நீதான் தொகுத்திரங்கக் காண்பேனே. ௩௩

அண்டபகி ரண்டம் அனைத்துமொரு படித்தாக்
கண்டவர்கள் கண்ட திருக்காட்சியையுங் காண்பேனே. ௩௪

ஊனிருந்த காயம் உடனிருப்ப எந்தைநின்பால்
வானிருந்த தென்னவநான் வந்திருக்கக் காண்பேனே. ௩௫

ஆதிப் பிரானேஎன் அல்லல் இருளகலச்
சோதிப்ர காசமயந் தோற்றுவித்தால் ஆகாதோ. ௧௧

ஆசைச் சுழற்கடலில் ஆழாமல் ஐயாநின்
நேசப் புணைத்தாள் நிறுத்தினால் ஆகாதோ. ௧௨

பாசவினைக் கெல்லாம் பஞ்சாகச் செஞ்சேவே
ஈசஎன்னை வாவென் றிரங்கினால் ஆகாதோ. ௧௩

ஓயாவுள் ளன்பாய் உருகிவாய் விட்டரற்றிச்
சேயாகி எந்தைதன்னைச் சேரவைத்தால் ஆகாதோ. ௧௪

அறியாம் வாழ்வாய் அகண்டிதமாய் நின்றபரஞ்
சோதிநீ என்னைத் தொழும்பனென்றால் ஆகாதோ. ௧௫

விண்ணாரக் கண்ட விழிபோற் பரஞ்சோதி
கண்ணார நின்நிறைவைக் காணவைத்தால் ஆகாதோ. ௧௬

சோராமற் சோர்ந்துநின்று சின்மயனே நின்மயத்தைப்
பாராமற் பாரெனநீ பட்சம்வைத்தால் ஆகாதோ. ௧௭

கண்ணாடி போலஎல்லாங் காட்டுந் திருவருளை
உண்ணாடி ஐயா உருகவைத்தால் ஆகாதோ. ௧௮

மூலஇருள் கால்வாங்க மூதறிவு தோன்றஅருட்
கோலம்வெளி யாகஎந்தை கூடுவித்தால் ஆகாதோ. ௧௯

சாற்றரிய இன்பவெள்ளந் தாக்குமதில் நீமுளைக்கில்
ஊற்றமுறு மென்ன அதில் உண்மைசொன்னால் ஆகாதோ.

கையுங் குவித்திரண்டு கண்ணருவி பெய்யஅருள்
ஐயநின்தாள் கீழே அடிமைநின்றால் ஆகாதோ. ௨௧

## ௪௮. இல்லையோ என்கண்ணி

ஏதுந் தெரியா தென்னைமறைத்த வல்லிருளை
நாதநீ நீக்கவொரு ஞானவிளக் கில்லையோ. ௧

பவரியற்று நின்று பதைப்பற என்கண்ணுள்
மருவியொத்த சோதிஇன்ப வாரிஎனக் கில்லையோ. ௨

எம்மா லறிவதற எம்பெருமான் யானென்றிச்
சும்மா இருக்கவொரு சூத்திரந்தான் இல்லையோ. ௩

நாய்க்குங் கடையானேன் நாதாநின் இன்பமயம்
வாய்க்கும் படிஇனியோர் மந்திரந்தான் இல்லையோ. ௪

ஊனுருக நிற்கும் உணர்வைமறந் தையாநீ
தானுருக நிற்கவொரு தந்திரந்தான் இல்லையோ. ௫

அல்லும் பகலும் அகண்டவடி வேஉனை நான்
புல்லும் படிஎனக்கோர் போதனைதான் இல்லையோ. ௬

---

## ௪௯. வேண்டாவோஎன் கண்ணி

கண்டவடி வெல்லாநின் காட்சிஎன்றே கைகுவித்துப்
பண்டுமின் றும்நின் றஎன்னைப் பார்த்திரங்க வேண்டாவோ.

வாதனையோ டாடும் மனப்பாம்பு மாயஒரு
போதனைதந் தையா புலப்படுத்த வேண்டாவோ. ௨

தன்னை அறியத் தனியறிவாய் நின்றருளும்
நின்னை அறிந் தென்னறிவை நீங்கிநிற்க வேண்டாவோ. ௩

அள்ளக் குறையா அகண்டிதா னந்தமெனும்
வெள்ளமெனக் கையா வெளிப்படுத்த வேண்டாவோ. ௪

அண்டனே அண்ட ரமுதேஎன் ஆருயிரே
தொண்டனேற் கின்பர் தொகுத்திரங்க வேண்டாவோ. ரு

பாராதே நின்று பதையாதே சும்மாதான்
வாரா யெனவும் வழிகாட்ட வேண்டாவோ. சு

---

## ருய. நல்லறிவே என்கண்ணி

எண்ணிறைந்த மேன்மைபடைத் தெவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்க்
கண்ணிறைந்த சோதியைநாங் காணவா நல்லறிவே. க

சித்தான நாமென் சடத்தைநா மென்னஎன்றுஞ்
சத்தான உண்மைதனைச் சாரவா நல்லறிவே. உ

அங்குமிங்கும் எங்குநிறை அற்புதனார் பொற்பறிந்து
பங்கயத்துள் வண்டாய்ப் பயன்பெறவா நல்லறிவே. ௩

கான்றசோ றென்ன இந்தக் காசினிவாழ் வத்தனையுந்
தோன்ற அருள்வெளியில் தோன்றவா நல்லறிவே. ச

---

## ருக. பலவகைக்கண்ணி

என்னரசே கேட்டிலையோ என்செயலோ ஏதுமில்லை
தன்னரசு நாடாகித் தத்துவங்கூத் தாடியதே. க

பண்டொருகால் நின்பாற் பழக்கமுண்டோ எந்தைநினைக்
கண்டொருகாற் போற்றக் கருத்துங் கருதியதே.

கண்டனவே காணுமன்றிக் காணுவோ காணுஎன்
கொண்டறிவேன் எந்தைநினைக் கூடுங் குறிப்பினையே. ௩

கல்லா லடியில்வளர் கற்பகமே என்னளவோ
பொல்லா வினைக்குப் பொருத்தந்தான் சொல்லாயோ. ச

தப்பிதமொன் றின்றியது தானாக நிற்கஉண்மை
செப்பியதா மல்லாலென் செல்லியது தொட்டனையே. ௫

மாசான நெஞ்சன்இவன் வஞ்சனென்றோ வாய்திறந்து
பேசா மவுனம் பெருமான் படைத்ததுவே. ௬

கற்பதெல்லாங் கற்றோம்நாங் கண்டுடையாய் நின்பணியாய்
நிற்பதனற் றன்றோ நிருவிகற்ப மாவதுவே. ௭

முன்னாளில் கன்மம் முயன்றான் இவனென்றோ
என்னாளில் எந்தாய் இரங்கா திருந்ததுவே. ௮

நெஞ்சமெல்லா மாகி நினைக்கூட என்றுநின்ற
வஞ்சகனுக் கின்பமெந்தாய் வாய்க்குமா றெவ்வாறே. ௯

பள்ளங்கள் தோறும் பரந்தபுனல் போல்உலகில்
உள்ளம் பரந்தால் உடையாயென் செய்வேனே. ௧0

முன்னினைக்கப் பின்மறைக்கும் மூடஇருள் ஆகெடுவேன்
என்னினைக்க என்மறக்க எந்தை பெருமானே. ௧௧

வல்லாளா மோனநின் வான்கருணை என்னிடத்தே
இல்லாதே போனால்நான் எவ்வண்ணம் உய்வேனே. ௧௨

வாக்கும் மனமும் மவுனமுற எந்தைநின்னை
நோக்கும் மவுனமிந்த நூலறிவில் உண்டாமோ. ௧௩

ஒன்றாய்ப் பலவாய் உலகமெங்குந் தானேயாய்
நின்றாய் ஐயாஎனைநீ நீங்கற் கெளிதாமோ. ௧௪

ஆவித் துணையே அருமருந்தே என்றனைநீ
கூவி அழைத்தின்பங் கொடுத்தாற் குறைவாமோ. ௧௫

எத்தனையோ நின்வினையாட் டெந்தாய்கேள் இவ்வளவென்
றத்தனையும் என்னால் அறியுந் தரமாமோ. ௧௬

தேடுவார் தேடுஞ் சிவனேயோ நின்திருத்தாள்
கூடுவான் பட்டதுயர் கூறற் கெளிதாமோ. ௧௭

பற்றினதைப் பற்றும்எந்தாய் பற்றுவிட்டாற் கேவலத்தில்
உற்றுவிடும் நெஞ்சம்உனை ஒன்றிநிற்ப தெப்படியோ. ௧௮

ஒப்பிலா ஒன்றேநின் உண்மையொன்றுங் காட்டாமல்
பொய்ப்புவியை மெய்போற் புதுக்கிவைத்த தென்னேயோ.

காலால் வழிநடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே எனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ. ௨௦

தன்னரசு நாடாஞ் சடசால பூமிமிசை
என்னரசே என்னை இறையாக நாட்டினையோ. ௨௧

திங்களமு தாநின் திருவாக்கை விட்டரசே
பொங்கு விடயனைய பொய்ந்நூல் புலம்புவனே. ௨௨

உன்னைஉன்ன என்னைஎடுத் துள்விழுங்கு நின்நிறைவை
இன்னமின்னங் காணாமல் எந்தாய் சுழல்வேனே. ௨௩

ஆரா அமுதனைய ஆனந்த வாரிஎன்பால்
தாராமல் ஐயாநீ தள்ளிவிட வந்ததென்னே. ௨௪

---

## ௫௨. நின்றநிலை

நின்றநிலை யேநிலையா வைத்தா னந்த
நிலைதானே நிருவிகற்ப நிலையு மாகி
என்றுமழி யாதஇன்ப வெள்ளந் தேக்கி
இருக்கஎனைத் தொடர்ந்துதொடர்ந் திழுக்குமந்தோ.

இருக்காதி மறைமுடிவுஞ் சிவாகம மாதி
இதயமுங்கை காட்டெனவே இதயத் துள்ளே
ஒருக்காலே யுணர்ந்தவர்கட் கெக்கா லுந்தான்
ஒழியாத இன்பவெள்ளம் உலவா நிற்கும். ௨

கற்றதுங்கேட் டதுந்தானே ஏதுக் காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூட அன்றோ. ௩

---

## ௫௩. பாடுகின்ற பனுவல்

பாடுகின்ற பனுவலோர்கள், தேடுகின்ற செல்வமே
நாடுகின்ற ஞானமன்றில், ஆடுகின்ற அழகனே. க

அத்தனென்ற நின்னையே, பத்திசெய்ய பனுவலால்
பித்தனின்று பேசவே, வைத்ததென்ன வாரமே. உ

சிந்தையன்பு சேரவே, நைந்துநின்னை நாடினேன்
வந்துவாய்ந்த வின்பமே, தந்திரத்த தாணுவே. ௩

அண்டரண்டம் யாவுநீ, கொண்டுநின்ற கோலமே
தொண்டர்கண்டு கொள்கெனீர், கண்டநெஞ்சு கரையுமே. ௪

அன்னைபோல அருள்மிகுத்த, மன்னுஞான வரதனே
என்னையே யெனக்களித்த, நின்னையானும் நினைவனே. ௫

## ௫௪. ஆனந்தக்களிப்பு

சங்கர சங்கர சம்பு - சிவ, சங்கர சங்கர சங்கர சம்பு.

ஆதி யநாதியு மாகி - எனக், கானந்த மாயறி வாய்நின் றிலங்குஞ், சோதி மவுனியாய்த் தோன்றி - அவன், சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி—சங்கர க

சொன்னசொல் லேதென்று சொல்வேன் - என்னைச், சூதாய்த் தனிக்கவே சும்மா இருத்தி, முன்னிலை ஏது மில்லாதே - சுக, முற்றச்செய் தென்னைப் பற்றிக்கொண் டாண்டி—சங்கர உ

பற்றிய பற்றற உள்ளே - தன்னைப், பற்றச் சொன் னான் பற்றிப் பார்த்த இடத்தே, பெற்றதை ஏதென்று சொல்வேன் - சற்றும், பேசாத காரியம் பேசினான் தோழி—சங்கர ௩

பேசா இடும்பைகள் பேசிச் - சுத்தப், பேயங்க மாகிப்
பிதற்றித் திரிந்தேன், ஆசா பிசாசைத் துரத்தி - ஐயன்,
அடியிணைக் கீழே அடக்கிக் கொண்டாண்டி—**சங்கர** ச

அடக்கிப் புலனைப் பிரித்தே - அவ, ஐகிய மேனியில்
அன்பை வளர்த்தேன், மடக்கிக்கொண் டானென்னைத் தன்
னுள் - சற்றும், வாய்பேசா வண்ணம் மரபுஞ்செய் தாண்டி—
**சங்கர** ரு

மரபைக் கெடுத்தனன் கெட்டேன் - இத்தை, வாய்
விட்டுச் சொல்லிடின் வாழ்வெனக் கில்லை, கரவு புருஷனும்
அல்லன் - என்னைக், காக்குந் தலைமைக் கடவுள்காண்
மின்னே—**சங்கர** சு

கடலின் மடைவிண்ட தென்ன - இரு, கண்களும்
ஆனந்தக் கண்ணீர் சொரிய, உடலும் புளகித மாக - என,
துள்ள முருக உபாயஞ்செய் தாண்டி—**சங்கர** எ

உள்ளது மில்லது மாய்முன் - உற்ற, உணர்வது வாயுன்
னுளங்கண்ட தெல்லாந், தன்னெனச் சொல்லினன் ஐயன் -
என்னைத், தானாக்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி—
**சங்கர** அ

பாராதி பூதநீ யல்லை - உன்னிப், பாரிந் திரியங் கரணநீ
யல்லை, ஆராய் உணர்வுநீ என்றான் - ஐயன், அன்பாய்
உரைத்தசொல் லானந்தந் தோழி—**சங்கர** கூ

அன்பருக் கன்பான மெய்யன் - ஐயன், ஆனந்த
மோனன் அருட்குரு நாதன், தன்பாதஞ் சென்னியில்
வைத்தான் - என்னைத், தானறிந் தேன்மனந் தானிறந்
தேனே—**சங்கர** க0

இறப்பும் பிறப்பும் பொருந்த - எனக், கெவ்வண்ணம்
வந்ததென் றெண்ணியான் பார்க்கில், மறப்பும் நினைப்புமாய்
நின்ற - வஞ்ச, மாயா மனத்தால் வளர்ந்தது தோழி—
**சங்கர** கக

மனதேதல் லாவெனக் கன்றோ - தெய்வ, மவுன குரு வாகி வந்துகை காட்டி, எனதாம் பணியற மாற்றி - அவன், இன்னருள் வெள்ளத் திருத்திவைத் தாண்டி---சங்கர கஉ

அருளால் எவையும்பார் என்றான் - அத்தை, அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன், இருளான பொருள்கண்ட தல்லால் - கண்ட, என்னையுங் கண்டிலன் என்னேடி தோழி—சங்கர கங

என்னையுந் தன்னையும் வேறா - உள்ளத், தெண்ணாத வண்ணம் இரண்டற நிற்கச், சொன்னது மோஒரு சொல்லே - அந்தச், சொல்லால் விளைந்த சுகத்தைஎன் சொல்வேன்—சங்கர கச

விளையுஞ் சிவானந்த பூமி - அந்த, வெட்ட வெளிநண் ணிக் கட்டஇருளாங், களையைக் களைந்துபின் பார்த்தேன் - ஐயன், விளையன்றி வேறொன்றுங் கண்டிலன் தோழி—சங்கர கரு

கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை - இரு, கண்காண நீக்கவுங் கண்டோந் துயில்தான், கொண்டார்போற் போனதும் போதும் - இனிக், குணமேது நலமேது கூறாய்நீ தோழி—சங்கர கசு

நலமேதும் அறியாத என்னைச் - சுத்த, நாதாந்த மோன பரம் காட்டந்தன் தேசஞ், சலமேதும் இல்லாமல் எல்லாம் - வல்லான், தாளால்என் தலைமீது தாக்கினன் தோழி—சங்கர கஎ

நாக்குமல் லானந்த சோதி - அணு, தன்னிற் சிறிய எனைத்தன் னருளாற், போக்கு வரவற் றிருக்குஞ் - சுத்த, பூரண மாக்கினன் புதுமையா மன்னே—சங்கர கஅ

ஆக்கி அளித்துத் துடைக்குந் - தொழில், அத்தனை வைத்துமென் னத்தனை யேனுந், தாக்கற நிற்குஞ் சமர்த்

தன் - உள்ள, சாட்சியைச் சிந்திக்கத் தக்கது தோழி—
சங்கர ௧௯

சிந்தை பிறந்ததும் ஆங்கே - அந்தச், சிந்தை இறந்து
தெளிந்ததும் ஆங்கே, எந்த நிலைகளும் ஆங்கே - கண்ட,
யான்றான் இரண்டறத் திருந்ததும் ஆங்கே—சங்கர ௨௦

ஆங்கென்றும் ஈங்கென்றும் உண்டோ - சச்சி, தானந்த
சோதி அகண்ட வடிவாய், ஓங்கி நிறைந்தது கண்டாற் -
பின்னர், ஒன்றிரண் டென்றுரைத்திட வாமோ
—சங்கர ௨௧

என்றும் அழியுமிக் காயம் - இதை, எதற்கு மெய்யென்
றிருந்தீர் உயிர், ஒன்று மறியாத நீரோ - யமன், ஓலை வந்
தாற்சொல்ல உத்தரம் உண்டோ—சங்கர ௨௨

உண்டோ நமைப்போல வஞ்சர் - மல, முறித்த தாம்பும்
உடலைமெய் யென்று, கொண்டோ பிழைப்பதிங் கையோ -
அருட், கோலத்தை மெய்யென்று கொள்ளவேண் டாவோ
—சங்கர ௨௩

வேண்டா விருப்பும் வெறுப்பும் - அந்த, வில்லங்கத்
தாலே வினையுஞ் சனனம், ஆண்டான் உரைத்த படியே -
சற்றும், அசையா திருந்துகொள் அறிவாகி நெஞ்சே—
சங்கர ௨௪

அறிவாரும் இல்லையோ நீயோ - என்னை, யாரென் றறி
யாத வங்கமே சத்தில், வறிதே காமத்தீயிற் சிக்கி - உள்ள,
வான்பொருள் தோற்கவோ வந்தேனான் தோழி—சங்கர

வந்த வரவை மறந்து - மிக்க, மாதர்பொன் பூமி மயக்கத்
தில் ஆழும், இந்தமயக்கை அறுக்க - எனக், கெந்தை மெய்ஞ்
ஞான எழில்வாள் கொடுத்தான்—சங்கர ௨௬

வாளாருங் கண்ணியர் மோகம் - யம, வாதைக் கனலை
வளர்க்குமெய் என்றே, வேளா னவனுமெய் விட்டான் -
என்னில், மிக்கோர் துறக்கை விதியன்றோ தோழி—சங்கர

விரிக்கும் பிரபஞ்ச மெல்லாஞ் - சுத்த, வெயில் மஞ்ச ளென்னவே வேதாகமங்கள், மறிக்கும் அதனை மதியார் - அவர், மார்க்கந்தான் மார்க்கஞ்சன் மார்க்கமோ மானே—சங்கர உஅ

துன்மார்க்க மாதர் மயக்கம் - மனத், தாயர்க்குப் பற்றுத சொன்னேன் சனகன், நன்மார்க்க நீதிநிட்டாந்தம் - அவன் ஞானந்த மான சதானந்த னன்றோ—சங்கர உகூ

அன்றென்றும் ஆமென்றும் உண்டோ - உனக், கானந் தம் வேண்டின் அறிவானிச் சற்றே, நின்றால் தெரியும் எனவே - மறை, நீதியை மாதி விக்கழ்ந்திறுன் தோழி— கூ0

சங்கர சங்கர சம்பு - சிவ, சங்கர சங்கர சங்கர சம்பு

---

## ருரு. அகவல்

திருவருள் ஞானஞ் சிறந்தருள் கொழிக்குங்
குருவடி வான குறைவிலா நிறைவே
நின்ற ஒன்றே நின்மல வடிவே
குன்றாப் பொருளே குணப்பெருங் கடலே
ஆதியும் அந்தமும் ஆனந்த மயமாஞ்
சோதியே சத்தே தொலைவிலா முதலே
சீர்மலி தெய்வத் திருவரு ளதனால்
பார்முத லண்டப் பரப்பெலாம் நிறுவி
அண்டசம் முதலாம் எண்டரு நால்வகை
எழு பிறவியில் தாழா தோங்கும்

அனந்த யோனியின் இனம்பெற மல்க
அணுமுத லசல மான வாக்கையுங்
கணமுத லளவிற் கற்ப காலமுங்
கன்மப் பகுதித் தொன்மைக் கீடா
இமைப்பொழு தேனுந் தமக்கென அறிவிலா
ஏழை உயிர்த்திரள் வாழ அமைத்தனை
எவ்வுடல் எடுத்தார் அவ்வுடல் வாழ்க்கை
இன்ப மெனவே துன்ப மிலையெனப்
பிரியா வண்ணம் உரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலும் அமைத்திட்
டேக மின்றியே தேகம் நானென
அறிவு போலறி யாமை இயக்கிக்
காலமுங் கன்மமுங் கட்டுங் காட்டியே
மேலும் நாகமும் மேதகு சுவர்க்கமும்
மாலற வகுத்தனை ஏலும் வண்ணம்
அமையாக் காதலிற் சமய கோடி
அறம்பொரு ளாதி திறம்படு நிலையில்
குருவா யுணர்த்தி யொருவர்போ லனைவரும்
தத்தம் நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்
நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை எங்கு மாகிச்
சமயா தீதத் தன்மை யாகி
இமையோர் முதலிய யாவரும் முனிவருந்
தம்மைக் கொடுத்திட் டெம்மை யாளென
ஏசற் றிருக்க மாசற்ற ஞான
நலமுங் காட்டினை ஞானமி லேற்கு
நிலையுங் காட்டுதல் நின்னருள் கடனே.

---

## ௫௯. வண்ணம்

அருவென் பனவுமன்றி யுருவென் பனவுமன்றி
அகமும் புறமுமன்றி—முறைபிற ழாத
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறைவொன் றனைவிளம்ப—விமலம தாகி
அகலம் பெறவுயர்க்க விபுலம் பெறவளர்க்க
சபலஞ் சபலமென்றன்—அறிவினர் காண
—ஞானவெளியிடை மேவுமுயிராய்,

அனலொன் றிடவெரிக்கு புகைமண் டிடுவதன்று
புனலொன் றிடவமிழ்ந்து—மடிவில தாதை
சருவும் பொழுதுயர்க்க சலனம் படுவதன்று
சமர்கொண் டழிவதன்றே—ரியல்பின தாகும்
அவனென் பதுவுமன்றி யவளென் பதுவுமன்றி
யதுவென் பதுவுமன்றி—எழில்கொ டுலாவும்
—ஆருநிலையறி யாதபடியே,

இருளென் பதுவுமன்றி யொளியென் பதுவுமன்றி
எவையுந் தனுளடங்க—ஒருமுத லாகும்
உளதென் பதுவுமன்றி இலதென் பதுவுமன்றி
உலகந் தொழவிருந்த—அயன்முத லோர்கள்
எவருங் கலைகொண்டு சமயங் களில்விழுந்து
சுழலும் பொழுதிரங்கி—யருள்செயு மாறு
—கூறரியசக மாயையறவே,

எனதென் பனதையிகழ்ந்த அறிவின் திரளினின்றும்
அறிவொன் றெனவிளங்கும்—உபசம தாக
அறியுந் தரமுமன்று பிறியுந் தரமுமன்று
அசரஞ் சரமிரண்டின்—ஒருபடி யாகி
எதுசந் ததநிறைந்த தெதனிற் றனதிறந்த
தெதுமங் களசுபங்கொள்—சுகவடி வாகும்
—யாதுபரமதை நாடியறிநீ,

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து—கெடுவினை வாகி
வலையின் புடைமறிந்த மறியென் றவசமுண்டு
வசனந் திரமுமின்றி—அவரித ழூறல்
பருகுந் தொழிலிணங்கி இரவும் பகலுமின்சொல்
பகரும் படிதுணிந்து—குழலழ காக
—மாலைவகைபல சூடியுடனே,

பதுமந் தனையிகந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று—களியென வாடுஞ்
சிலுகின் கிணிசிலம்பு புனைதண் டைகள்முழங்கும்
ஒலியென் றெனமகிழ்ந்து—செவிகொள நாடி
பசுமஞ் சளின்மிகுந்த மணமுந் திடமுகந்து
பவமிஞ் சிடவிறைஞ்சி—வரிசையி னூடு
—காலின்மிசைமுடி சூடிமயலாய்,

மருளுந் தெருளும்வந்து கதியென் பதைமறந்து
மதனன் சலதிபொங்க—இரணம தான
அளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று—பரவச மாகி
மருவுந் தொழில்மிகுந்து தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த—படிமதி சோர
—வானரமதென மேனிதிரையாய்,

வயதும் பட எழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ் செயலழிந்துள்—இருமலு மாகி
அனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று—சரியென நாடி
மனையின் புறவிருந்த இனமுங் குலைகுலைந்து
கலகஞ் செயஇருண்ட—யமன்வரும் வேளை
—எதுதுணைபழி காரமனமே. ௬

தாயுமானசுவாமிகள் பாடல்

முற்றுப்பெற்றது.

———

தாயுமானசுவாமிகள் மாணாக்கர்

அருளையர்

தாயுமானசுவாமிகளைத் துதிசெய்த

## அருள்வாக்கிய அகவல்

திருவளர் கருணைச் சிவானந்த பூரணம்
ஒருவரும் அறியா ஒருதனிச் சித்து
நவந்தரு பேதமாய் நாடக நடித்தாற்
பவந்தனை நீக்கிப் பரிந்தருள் பராபரம்
கண்ணுங் கருத்துங் கதிரொளி போல
நண்ணிட எனக்கு நல்கிய நன்மை
ஒன்றாய்ப் பலவாய் ஒப்பிலா மோனக்
குன்றாய் நிறைந்த குணப்பெருங் குன்றம்
மண்ணையும் புனலையும் வளியையும் கனலையும்
விண்ணையும் படைத்த வித்திலா வித்துப்
பந்த மனைத்தையும் பாழ்பட நூறிஎன்
சிந்தையுட் புகுந்த செழுஞ்சுடர்ச் சோதி
மின்னொளொறு ஞானம் விளங்கிய மேலோர்
தொன்னைகொண் டெண்ணக் குறைவிலா நிறைவு
நாட்டா மரைமலர்த் தாள்நினைப் பவர்க்குக்
காட்டா இன்பங் காட்டிய கதிநிலை
வாக்கான் மனத்தான் மதித்திட அரிதென
நோக்கா திருக்க நோக்கிய நோக்கம்
ஆதியாய் அறிவாய் அகண்டமாய் அகண்ட
சோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம்
பரவெளி தன்னிற் பதிந்தஎன் னுளத்தின்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளம்
சுட்டுக் கடங்காச் சோதி யடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை
எல்லைக் கடங்கா ஏகப் பெருவெளி
தில்லைப் பொதுவில் திருநடத் தெய்வம்

வாதவூர் எந்தையை வரிசையாய் விழுங்கும்
போதவூர் மேவுகர்ப் பூர விளக்குச்
சுகரை அகண்டத் தூவெளி எல்லாந்
திகழவே காட்டுஞ் சின்மய சாட்சி
செழுந்தமிழ் அப்பரைச் சிவலிங்க மாகி
விழுங்கிய ஞான வித்தக வேழம்
எழில்தரு பட்டினத் திறைவரை யென்றும்
அழிவிலா இலிங்க மாக்கிய அநாதி
சாந்த பூமி தண்ணருள் வெள்ளம்
ஆர்ந்த நீழலசையாக் ககனம்
பரவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சி
இரவுபக லற்ற ஏகாந்தக் காட்சி
ஆட்சிபோ லிருக்கும் அகிலந் தனக்குச்
சாட்சியா யிருக்குந் தாரகத் தனிமுதல்
ஆணும் பெண்ணும் அலியுமல் லாதம்தோர்
தாணுவாய் நின்ற சத்தாந் தனிச்சுடர்
எள்ளும் எண்ணெயும் எப்படி அப்படி
உள்ளும் புறம்பும் உலாவிய ஒருபொருள்
அளவிலா மதந்தொறும் அவரவர் பொருளென
உளநிறைந் திருக்கும் ஒருபொற் பணிதி
துள்ளு மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளு மோனவாள் கொடுத்திடு மரசு
பெரிய பேறு பேசாப் பெருமை
அரிய உரிமை அளவிலா அளவு
துரிய நிறைவு தோன்றா அதீதம்
விரியுநல் லன்பு விளைத்திடும் விளைவு
தீராப் பிணியாஞ் செனன மறுக்க
வாரா வரவாய் வந்தசஞ் சீவி
ஆலைக் கரும்புபா கமுதக் கட்டிநீள்
சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி
பாங்குறு மாங்கனி பால்தேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த் தொன்றாய்க் கூட்டி
அருந்திய ரசமென அறிஞர் சமாதியில்

பொருந்திய இன்பம் பொழிசிற் சுகோதயம்
எங்கணும் நிறைந்த இயல்பினை எனக்குச்
செங்கையால் விளங்கத் தெரித்தமெய்த் தேசிகன்
தன்னையறி வித்துத் தற்பர மாகி
என்னுளத் திருந்தருள் ஏகநாயகன்
அடிமுடி இல்லா அரும்பொருள் தனக்கு
முடியடி இதுவென மொழிந்திடு முதல்வன்
மெய்யலான் மற்றவை மெய்யல வெல்லாம்
பொய்யென அறிவெனப் புன்னகை புரிந்தோன்
அருளும் பொருளும் அபேதமா யிருந்தும்
இருதிற மென்னும் இயலுமுண் டென்றோன்
அருளெனக் கண்டேல் அருளும் வெளிப்படும்
பொருள்மயந் தானே பொருந்துமென் றுரைத்தோன்
சத்தசத் திரண்டு தன்மையந் தானே
ஒத்தலாற் சதசத் தானதென உரைத்தோன்
ஆணவ மறுவிடின் அருளுறு தென்னக்
காணரு நேர்மையாற் காணவே உரைத்தோன்
சென்மமுள் ளளவுந் தீரா திழுக்குங்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ளல்
உளதில தெனவும் உறுதலான் மாயை
வளமில தெனவும் வகுத்தினி துரைத்தோன்
இல்லறத் திருந்தும் இதய மடக்கிய
வல்லவன் தானே மகாயோகி என்றோன்
துறவறத் திருந்துஞ் சூழ்மனக் குரங்கொன்
றறவகை யறியான் அஞ்ஞானி என்றோன்
இறவா மனந்தான் இறக்க உணர்த்திப்
பிறவா வரந்தரும் பேரறி வாளன்
அத்தன் அருளால் அனைத்தையும் இயக்குஞ்
சத்தமா மாயையின் தோற்றமென் றுரைத்தோன்
இருள்மல மகல இசைந்ததில் அழுந்தும்
பொருளருட் டிரோதைப் பொற்பெனப் புகன்றோன்
வீறு சிவமுதல் விளம்பிய படியே
யாறும நாதிலன் றறிஞருக் குரைப்போன்

கொல்லா விரதங் குவலயத் தோர்கள்
எல்லாம் பெறுமினென் றியம்பிய தயாநிதி
தருமமுந் தானமுந் தவமும் புரிபவர்க்
குரிமையா யவரோ டுறவு கலப்பவன்
தன்னுயிர் போலத் தரணியின் மருவிய
மன்னுயி ரனைத்தையும் வளர்த்திடும் வேந்தன்
களவுவஞ் சனைகள்செய் கருமிகள் தமக்குந்
தெளிவுவந் தருளருள் செய்திடுந் திறத்தோன்
தான்பெறும் பேறு சகமெலாம் பெறவே
வான்பெருங் கருணை வழங்கிய மாரி
தஞ்சமென் றடைந்த தாபதர் தம்மை
அஞ்சலென் றருளும் அறிஞர் சிகாமணி
சீவ கோடிகளுஞ் சித்த கோடிகளும்
யாவரும் புகழ யாவையும் உணர்ந்தோன்
யானென தென்ற றிறைவனெம் பெருமான்
தானவ னாகிய தலைவனெங் கோமான்
அருண கிரியார்க் காறு முகன்சொலும்
பொருள்நல மல்லது பொருளென மதியான்
பூத முதலாப் பொலிந்திடு நாத
பேதமுங் கடந்த பெருந்தகை மூர்த்தி
மூலா தார முதலா யுள்ள
மேலா தாரமும் வெறுவெளி கண்டவன்
மண்டல மூன்றிலும் மன்னிய உருவிலுங்
கண்டவை யத்திலுங் கடவுளாய் நின்றோன்
பகர்சம யந்தொறும் பரமே யிருந்து
சுகநடம் புரியுந் தொழிலெனச் சொன்னோன்
பேத அபேத பேதா பேத
போத மிதுவெனப் புகன்றிடும் புண்ணியன்
அதுநா னெனவே யாற்றிடும் அனுபவஞ்
சதுர்வே தாந்தத் தன்மையென் றுரைத்தோன்
அல்லும் பகலும் அறிவா னோர்க்குச்
சொல்லும் பொருளுஞ் சுமையெனச் சொன்னோன்
சுதனே குருவாஞ் சுவாமிநா யகற்கெனின்

அறிவமெய்ஞ் ஞான மல்லவோ வென்றேன்
நேசயோ கத்துறை நிருபரெல் லாந்தொழும்
இராசயோ கத்திறை இராச யோகத்தான்
பொறுமை தெளிவு புனித வாசாரம்
மறுவிலா வண்மை வார மியற்கை
தண்ணமர் சாந்தந் தயங்கிய கீர்த்தி
எண்ணெண் கலைபயி லிணையிலாக் கல்வி
நல்ல இரக்கம் நடுநிலை சத்தியம்
இனிமை என்றுமெவ் வெவர்க்குந் தருங்கொடை
நற்குண மெல்லாம் நண்ணிய பெருந்தகை
சிற்குண வாரி திருவருட் செல்வன்
ஏமே யெடுத்துக் கருத்துற வணங்கிப்
பரமே யுனக்குப் பரமெனப் பகர்ந்தோன்
ஆலடி மேவும் அரசினை அடுத்தே
சிவமெய்ஞ் ஞானந் தெளிந்தன னெனவுஞ்
சித்த மவுனி திடசித்த மாக
வைத்த நிலையின் வளர்ந்தன னெனவும்
மூலன் மரபின் முளைத்த மவுனிதன்
பாலன்யா னெனவும் பரிவொடும் பகர்ந்தோன்
வடமொழி இயற்கையின் மகிமையை உணர்ந்து
திடமுற முப்பொருள் திறத்தையுந் தெளிந்து
கண்டமு தென்னக் கனிரச மென்னத்
தண்டமிழ் மாரி தன்னைப் பொழிந்து
சித்தியும் முத்தியுஞ் சிறந்தருள் கொழிக்கும்
நித்திய நிரஞ்சன நிராலம்ப நிறைவைப்
பாடியும் நாடியும் பணிந்தெழுந் தன்பால்
ஆடியும் ஏற்றியும் அகங்குழை வெய்தியும்
உடலங் குழைய உரோமஞ் சிலிர்ப்ப
படபடென் றுள்ளம் பதைத்துப் பதைத்துப்
பாங்குற நெட்டுயிர்ப் பாகிப் பரதவித்
தேங்கி ஏங்கி இரங்கி இரங்கி
ஓய்ந்த பம்பரம்போ லொடுங்கியே சிறிது
மேய்ந்த விழிக ளிமைப்பது மின்றிச்

சோர்ந்து சோர்ந்து துவண்டு துவண்டுமெய்
யார்ந்த அன்போ டவசமுற் றடிக்கடி
உள்நடுக் குறவே உருகியே சற்றுத்
தண்ணமர் மொழியுந் தழுதழுத் திடவே
உள்ளும் புறம்பும் ஒருமித் துருகி
வெள்ள நீர்போல் விழிநீர் பெருக்கிக்
கன்று பசுவைக் கருதிக் கதறிச்
சென்றுசென் றோடித் திகைப்பது போல
என்புநெக் குடைய இருகரங் குவித்துப்
புன்புலால் யாக்கை பொருந்தா தினியென
உணர்ந்துணர்ந் தன்பா லலைகைமேற் கொண்டிடினிக்
கணம்பிரி யேனெனக் கருதியே துதித்துத்
திருவுரு வெல்லாந் திருநீ றிலங்க
இருகர நளினம் இயன்முடி குவித்துப்
பூரண சந்திரன் போலொளி காட்டுங்
காரண வதனங் கவின்குறு வெயர்வுற
இளநிலா வெனவே இலங்கிய சிறுநகை
தளதள வென்னத் தயங்கி எழில்பெற
இத்தன்மை எல்லா மிசைந்து மிவனருட்
சித்தெனச் சிவசத்தி தோர்ந்தவ ருரைப்பப்
பாத்திர மாடப் பரிவுட னோடிச்
சாத்திரங் காட்டித் தயவுசெய் தருளும்
வல்லவ னெனவே மன்னுயிர்க் காக
எல்லையி லன்ப னிவனென விளங்கி
ஈன வுலகத் தியற்கைபொய் யென்றே
ஞான நூல் மெய்யென நவின்றினி திரங்கிக்
கேவல சகலங் கீழ்ப்பட மேலாய்
மேவருஞ் சுத்த மெய்யினை நல்க
அருளே யுருவுகொண் டவனியில் வந்த
பொருளே இவனெனப் பொலிந்திடும் புனிதன்
சைவஞ் சிவனுடன் சம்பந்த மென்பது
மெய்வளர் ஞானம் விளக்குமென் றிசைத்தோன்
கதிர்விழி யொளியுறக் கலத்தல் சித்தாந்த

விதிமுறை யாமென விளம்பிய மேலோன்
முடிவினில் ஆகம முறைமையி னுண்மையை
அடியரைக் குறித்துரைந் தருளிய அண்ணல்
சிதம்பர சேர்மை தெரிமா வுரைத்திறை
பதம்பர வெனப்பகர் பரமமெய்ஞ் ஞானி
முத்தியஞ் சாக்கிர முறைமையி லயிக்கியஞ்
சத்திய மிதுவெனச் சார்ந்தவர்க் குரைத்தோன்
ஐந்தெழுத் துள்ளே அனைத்தையுங் காட்டிஎன்
னெஞ்சழுத் தியகுரு நீதி மாதவன்
எல்லா நிறைந்த இறைவன் செயலெனக்
கல்லா எனக்குங் கருணைசெய் கடவுள்
குருவரு ளாலே கூடுவ தல்லால்
இருவரு ளாருதெனத் தெரிந்திட உரைத்தோன்
குருவுரு வருமெனக் கொண்டபின் குறையாப்
பொருள்மய மாமெனப் புகன்றிடு போதன்
எந்த மூர்த்திகளையு மெழிற்குரு வடிவெனச்
சிந்தையில் தியக்கறத் தேர்ந்தவர்க் குரைந்தோன்
சதாசிவ மென்றபேர் தான்படைத் ததுதான்
எதாவதே பொருளென் றெடுத்தெடுத் துரைத்தோன்
கல்லானை கன்னல் கவர்ந்திடச் செய்தவன்
எல்லாம் வல்லசித் தெம்மிறை என்றோன்
எவ்வுயிர் தோறும் இறைமே வியதிறஞ்
செவ்விய பிரம்படி செப்பிடு மென்றோன்
எவ்வண மெவரெவ ரிசைத்தன ரவரவர்க்
கவ்வண மாவனெம் மானென அறைந்தோன்
ஒருபாண னுக்கே யொருசிவ னெட்படின்
வருமடி யார்திறம் வழுத்தொணா தென்றோன்
சிவனடி யாரைச் சிவனெனக் காண்பவன்
எவனவன் சிவனே என்றெடுத் துரைத்தோன்
விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்
கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோன்
இருசொல் லுரையா தியானின்ப மெய்த
ஒருசொல் லுரைத்த உயர்குண பூதரன்

அத்துவா மார்க்கம் ஆறையு மகற்றித்
தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன்
திருமகள் மருவிய திகழ்வள மறைசையில்
வருமுணர் வாளன் மருளிலா மனத்தான்
எண்ணிய எண்ணமெல் லாம்தெரிந் தெனக்குத்
தண்ணருள் செய்தவென் தாயு மானவன்
ஒருமொழி பகர்ந்த உதவியா லவன்றன்
இருபத முப்போ திறைஞ்சிவாழ்த் துவனே.

முற்றிற்று.

---

# திருப்பாடலகராதி

